"நான் ஒரு குடும்பப்பெண்
எனவே நான் உடுத்தும் உடைகள் குடும்பப் பாங்காக இருக்க வேண்டும்."

உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி

ம:.பத்லால்
:.பேப்ரிக்ஸ்

ம:.பத்லால் இண்டஸ்ட்ரீஸ் ம:.பத்லால் :.பைன்

MF-18 TAM

# நாலே நாளில் ஒரு கோயில்!

சென்னை பல்லாவரத்திலிருந்து பத்து நிமிட பஸ் பிரயாணம். பம்மல் என்ற இடத்தில் பஸ் நின்றவுடன் இறங்கிப் பத்து நிமிடம் நடந்தால் சங்கர நகர். நகருக்குள் நுழைந்தவுடனேயே வரவேற்பது ஒரு பிள்ளையார் கோயில்.

''பிள்ளையார் சதுர்த்தி அன்று வந்திருக்கிறீர்கள். சந்தனக் காப்பு அலங்காரம் நடந்து கொண்டிருக்கிறது. ஐந்து நிமிஷம் பொறுங்கள். தீபாராதனை காட்டுகிறோம்'' என்று கூறினார் ஒய். சுப்ரமணியம்.

சங்கர விநாயகர் வழிபாட்டுச் சங்கத்தின் தலைவர் ரமணி, விநாயகரின் வரலாற்றை விவரித்தார்: ''நாலே நாட்களில் உருவான பிள்ளையார் சார் இவர்! இந்த நகரில் உள்ள சுமார் ஐம்பது குடும்பங்களுக்கு மட்டுமல்ல, சுற்றியுள்ள காலனிகளுக்கும் சேர்த்து ஒரு கோயில் வேண்டும் என்று விரும்பினோம். நகர அமைப்பு இயக்குனர் கோயில் கட்டுவதற்கான இடத்தைத் தேர்ந்தெடுத்தார். அந்த இடம் மலையின் அடிவாரத்தில் இருக்கிறது. ஒரு ஏக்கர் நிலம் இந்தக் கோயிலுக்காக ஒதுக்கப்பட்டுள்ளது. ஆனால் மலையை உடைப்பவர்கள், 'எங்கள் தொழிலில் ஏன் மண் அள்ளிப் போடுகிறீர்கள்' என்று கேட்க, விஷயம் பஞ்சாயத்துக்குச் சென்றது. 1978ம் ஆண்டு அந்த இடத்தில் எதுவுமே கட்டப்படக் கூடாது என்று அரசின் உத்தரவு வந்துவிட்டது. அதாவது கட்டலாம் என்ற உத்தரவை அரசு வாபஸ் பெற்றுக் கொண்டது. திரும்பவும் கோயிலுக்கு இடம் என்று நாங்கள் அலைய ஆரம்பித்தோம்.

''பூங்காவுக்காக முதலில் ஒதுக்கப்பட்டிருந்த இடம் பிறகு தனிப்பட்ட ஒரு நபரின் கீழ் வந்து விட்டபடியாலும், அது நகரின் மையப் பகுதியில் இருந்ததாலும் அங்கே கோயில் கட்டலாம் என்று முடிவு செய்தோம். இந்தச் சமயத்தில் பஞ்சாயத்து யூனியனின் எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர், 'அதிகாரபூர்வமாக இது செல்லுபடியாகாது' என்று தடை சொல்ல ஆரம்பித்தார். நாட்கள், மாதங்கள், வருடங்கள் சென்றன. எதிர்ப்புக்கள் வலுக்கவே இந்த ஆகஸ்ட் மாதம் 19ம் தேதி இரவோடிரவாக ஒரு முடிவு எடுத்தோம். ஐம்பது குடும்பங்களில் நாற்பது குடும்பங்கள் எங்களுடன் ஒத்துழைத்தன. எவ்வளவு சீக்கிரம் கோயில் கட்ட முடியுமோ அவ்வளவு சீக்கிரம் கட்டி முடிக்கத் திட்டமிட்டோம். விக்கினம் இல்லாமல் இருக்க விநாயகர்தானே துணை. அவரையே பிரதிஷ்டை செய்ய நினைத்து விக்ரஹத்தைத் தேட ஆரம்பித்தோம். தேடுவதற்கு விநாயகர் விடவில்லை. அவரே எங்களை நாடி வந்தடைந்தார்.

''இதே நகரில் உள்ள ஒருவரது உறவினரான கண்ணப்ப முதலியார் பூந்தமல்லியிலுள்ள கோலப்பஞ்சேரியின் சிவன் கோயிலின் தர்மகர்த்தா. அவர், ''எனது கோயிலில் ஒரு விநாயகர் சிலை இருக்கிறது. சுமார் நூறு வருடங்களுக்கு மேல், அதாவது மூன்று தலைமுறையாக அங்கே இருக்கிறது. அதிலும் சுமார் 25 ஆண்டுகள் இந்தச் சிலை கிணற்றிலேயே இருந்திருக்கிறது. சக்தி வாய்ந்தது. எடுத்துக்கொள்ளுங்கள்'' என்று கூற ஆச்சரியத்தில் ஆழ்ந்தோம். வைத்தீஸ்வரன் கோயிலைச் சேர்ந்த ஸ்தபதிதான் இந்தப் பம்மல் கோயிலையும் கட்டியவர். கோயிலுக்குத் தேவையான ஒவ்வொன்றையும் வாங்கிக் கொடுக்கும் பொறுப்பைப் பகிர்ந்து கொண்டோம். ஒருவர் மணல் கொணர்ந்தார், மற்றொருவர் சிமெண்ட். செங்கல்லைக் கொணர்ந்தவர் வேறொருவர். இரும்பைக் கொண்டுவர ஒப்புக்கொண்டார் மற்றொருவர். குடும்பப் பெண்மணிகள் வீடு வீடாகச் சென்று பணம் வசூலித்து இரண்டு பித்தளைக் குத்துவிளக்கு, மணி, குடம் என்று பூஜைக்குத் தேவையானவற்றை எல்லாம் வாங்கிக் கொடுத்தார்கள்.

''நங்கநல்லூரைச் சேர்ந்த விஸ்வபதி சாஸ்திரிகள் பிள்ளையாரை பிரதிஷ்டை செய்தார். ஆகஸ்ட் 19ம் தேதி தொடங்கிய பிள்ளையார் கோயில் 23ம் தேதி கும்பாபிஷேகத்துடன் நிறைவு பெற்றது. யாரும் ஆட்சேபணை எழுப்ப அவகாசம் தராமல் நான்கே நாட்களில் உருவாகி விட்டது. சின்னக் கோயில்தான் என்றாலும் கடனில்லாமல் கட்டப்பட்டிருக்கிறது. ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் கடன் இருக்கிறது. சிமிண்ட் கிடைக்காத காரணத்தால் ஆறு மூட்டை சிமெண்டைக் கடனாகப் பெற்றுள்ளார் இந்த சங்கர விநாயகர்!''

பேட்டி: **சலன்**

படம்: **யோகா**



# கொஞ்சம் அன்புடன் வம்பு!

● மக்கள்தொகை பற்றிய கூட்டம் ஒன்று நடந்தது. இதில் சட்டமன்ற, மேலவை உறுப்பினர்கள் கலந்துகொண்டார்கள். முதல்வர் எம். ஜி. ஆர். வெளியிட்ட யோசனைகள்:

● இரண்டுகுழந்தைகளுக்கு மேல் பெற்றால் வாக்குரிமையை இழந்து விடுவதாக இருக்க வேண்டும்.

● கருத்தடை செய்து கொள்ளும் விஷயங்களில் மத சம்பிரதாயங்களை முஸ்லிம்கள் பார்க்கிறார்கள். நாட்டின் நன்மையைக் கருதி, இந்த மாதிரியான விஷயத்துக்கெல்லாம் மதத்தைப் பாதுகாப்பாக வைத்துக் கொள்வது, தவறானது என்பது என் கருத்து.

இந்தக் கூட்டத்தில் நாடாளுமன்ற சபாநாயகர் பல்ராம் ஜாக்கரும் கலந்து கொண்டார். எம்.ஜி. ஆரின் யோசனைகளைக் கரம் தட்டிக் கூட்டம் வரவேற்றபோது, 'என்ன பேசுகிறார்' என்று தமிழக சட்டமன்ற சபாநாயகர் ராஜாராமிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார் பல்ராம் ஜாக்கர்.

●● இப்போது பத்திரிகைகளில் அடிக்கடி இடம் பிடிப்பவர் ஆகிவிட்டார் மந்திரி குழந்தைவேலு. காளிமுத்துவின் சீஸன் ஓய்ந்துவிட்டது போலும்! சட்ட மன்றத்தில் தி.மு.க. எம்.எல்.ஏ. ரகுமான்கான், ஆபாச போஸ்டர்கள் பற்றிப் பேசிக் கொண்டிருந்த போது, இடையில் புகுந்து, அண்ணாசாலையில், 'மசாலா மந்திரவாதி'யின் சிலைகூடத் தான் ஆபாசமாகத் தெரிகிறது என்றார் குழந்தைவேலு. தி.மு.க. உறுப்பினர்களுக்கு மிகுந்த கோபம் வர, சட்டமன்றத்தில் அமளி. மறுநாள் அன்பழகன் இது பற்றி உரிமைப் பிரச்னை ஒன்றைக் கொண்டு வந்தார். ஆனால் எம். ஜி. ஆர். பெருந்தன்மையாக, மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். இப்படி முதல்வருக்குச் சங்கடத்தை உண்டாக்கிய குழந்தைவேலு, தமிழக மாநகராட்சிகளின் விளையாட்டுப் போட்டி நடந்தபோது, கயிறு இழுக்கும் போட்டியில் மதுரை அணி வெற்றி பெற்றதைக்கூடக் கவனிக்காமல், "மதுரை மேயரும் மதுரைக்காகப் போட்டியில் கலந்து கொண்டதால்தான் மதுரை அணி தோற்றுப் போனது" என்று சொன்னாரே பார்க்கலாம். கூட்டத்தில் கசமுசா. பிற்பாடு பேசிய முதல்வர் அமைச்சரைப் பற்றிப் பேசும் போது "குழந்தைத்தனமாகப் பேசும் என் தம்பி குழந்தைவேலு" என்று குறிப்பிட்டார்.

✖ பல்ராம் ✖ முதல்வர்



எம். ஜி. ஆர். செய்யப் போகும் மந்திரி சபை மாறுதலில், குழந்தைவேலு சற்று முக்கியத்துவம் இல்லாத இலாகாவுக்கு மாற்றப் பட்டால் வியப்பில்லை!

●●● தமிழக அமைச்சரவையிலேயே மிகவும் விசுவாசமுள்ள அமைச்சர் திருமதி கோமதி சீனிவாசன்தான். கருவுற்று எட்டு மாதம் ஆனபோதிலும், சட்ட மன்றத்துக்குத் தவறாமல் வந்து, உறுப்பினர்கள் கேள்வி கேட்டபோது, ஒவ்வொரு தடவையும் எழுந்து பதில் சொன்னபோது, பல உறுப்பினர்கள் 'பாவம், இந்த நிலையிலும் ஏன் வரவேண்டும்' என்று பரிவு காட்டினார்கள்.

●●●● ஹரிஜனங்கள் முஸ்லிமாக மாறிக் கொண்டிருக்கும் இந்த நாட்களில் ஒரு ஆச்சரியமான விஷயம் கிறிஸ்து மதத்தைச் சேர்ந்த அ. தி. மு. க. பிரமுகரும், 'தாய்' பத்திரிகை ஆசிரியருமான வலம்புரி ஜான் இந்து மதத்தில் சேர்ந்திருக்கிறார். நெற்றியில் குங்குமம் இட்டுக்கொண்டு தற்போது காட்சியளிக்கும் திரு ஜான், பெயரை மட்டும் மாற்றிக்கொள்ளவில்லை.

✖ கோமதி சீனிவாசன் ✖ வலம்புரி ஜான்





●●●●● பெரும்பாலும் அரசாங்க ஊழியர்கள் கடமைகளைச் சரிவரச் செய்யாமலும், ஆணவமாகவும் இருந்து வருகிறார்கள். இதற்குச் சமீபத்திய உதாரணம்: என்னுடைய நண்பருக்கு ஏற்பட்ட அனுபவம்: ஒரு அதிகாரியின் பெயரைச் சொல்லி, அவரைப் பார்க்க வேண்டும்' என்றார். "5ம் நம்பர் கேட்டுக்குப் போய்க் கேளுங்கள்" என்றார் கோட்டையிலிருந்த வரவேற்பாளர். அங்கு போய்க் கேட்டால், "பிரதான கேட்டில் உள்ள வரவேற்பாளரைக் கேளுங்கள்" என்று பதில் வந்தது. இப்படி அவரை அரை மணி நேரம் பந்தாடி விட்டார்கள் வரவேற்பாளர்கள். இரண்டரை மணிக்குச் சென்று விசாரித்தால் 'லஞ்ச் டைம்' என்றார்கள். அதையாவது மென்மையாகச் சொல்லியிருந்தால் பரவாயில்லை. "இது லஞ்ச் டைம்பா, அப்புறம் வா" என்று ஆணவக் குரலில் பதில் கூறினார்கள். சட்ட மன்றம் நடக்கும்போதே இப்படிப்பட்ட நிலை என்றால், மற்ற சமயங்களில் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்து கொள்ளுங்கள்!

— கௌசல்யா

## திருத்தலம் கண்டேன்!

**நா**ன் பிறந்த ஊர் என்பதால் இதை நான் திருத்தலமாகக் கருதவில்லை. இயற்கையாகவே அந்த யோக்கியதை எங்கள் திருத்துருத்தி என்னும் குத்தாலம் என்னும் குற்றாலத்துக்கு இருக்கிறது. ஏனும் ஏனும் என நான் அடுக்குவதில் அர்த்தம் இருக்கிறது. திருத்துருத்தி என்பது தலபுராணப் பெயர். குத்தாலம் என்பதும் புராணப் பெயர்தான். ஆனால் வெள்ளைக்காரத் துரைமார்கள், KUT-TALAM என ஆங்கிலத்தில் எழுத KUTRALAM எனச் சிலர் புழக்கத்தில் கொண்டு வந்து ரயில் நிலையத்தில் குற்றாலம் என்று தமிழில் எழுதி வைத்து விட்டனர். இருபது வருடங்களுக்கு முன் அதைக் குத்தாலம் என மாற்ற வேண்டும் என்று போராடி ஒருவர் அலுத்துப் போனார். நம்மவர்க்கே நம் பழம் நினைவுகள் பெருமைகள் போன்ற புனித உணர்ச்சிகள் இருப்பதில்லை என்பதற்கு இந்த முயற்சியின் தோல்வி ஒரு சான்று. ஆக ரயில் நிலையத்தில் குற்றாலம். மக்களின் பேச்சு வழக்கில் குத்தாலம். தலபுராணத்தில் திருத்துருத்தி என முப்பெயர்களோடு அழைக்கப்படும் பெருமை எங்களூருக்கு உண்டு!

இந்தப் பெருமைகளை முதன் முதலில் குறிப்பிடுவதால் வேறு பெரும் பெருமைகள் இல்லை என நேயர்கள் கருதிவிட வேண்டாம்.



# உத்தால மரம் தழைக்கும் குத்தாலம்

நாதா சம்பத்

செம்பியன் மகாதேவியார் கட்டிய அருமையான சிவன் கோவில் உண்டு. அது தான் இவ்வூரின் பிரதான கோயில். இன்னும் இருக்கும் கோயில்களிலும், இடிந்து விட்ட கோயில்களிலும் இரண்டு சிவன் கோயில்களாகவும், ஒரு பெருமாள் கோயிலாகவும், பல பிள்ளையார் இதர தேவதைகள் கோயில்களாகவும் கோயில்கள் நிறைந்தது குத்தாலம். பல கோயில்கள் இடிந்து பாழாகியிருக்கிற பழம் பெருமையும் எங்கள் ஊருக்கு உண்டு!

புராணச் செய்தியாகப் பார்வதி தேவி பரமேஸ்வரனை மணக்க இலிங்க வடிவாக இவ்வூர்க் காவிரிக் கரையில் மணலைப் பிடித்து வைத்துப் பூஜை செய்த வரலாறு உண்டு. சப்தரிஷிகள், அகத்தியர், சூரியன், வருணன், அக்கினி, காமன் போன்றோர் (விடுபட்டோர் மன்னிக்க) வழிபட்டதாகவும், அதற்கு ஆதாரமாகக் கோவில்களும் உண்டு.

இலக்கிய அகச் சான்றோடும், புறச் சான்றோடும் ஒரு வரலாறு உண்டு. சரித்திர ஆதாரமும் உண்டு. சமயக் குரவர் நால்வரில் ஒருவரான சுந்தரர் யாத்திரையாகப் பல தலங்களைப் போற்றிப் பாடிக் கொண்டு வந்தார். உடலில் ஒரு மாற்றம். பார்த்தால் சுந்தரத் திருவுருவம், கொண்டல் வண்ணத்துக்கு மாறி மேக நோயாகவும் உருவெடுத்து விட்டது. நோயற்ற வாழ்வல்லவா எல்லாவற்றுக்கும் அடிப்படை! தன் உடலின் கருமேகக் குறை சுந்தரரின் மனத்தை வெகுவாகப் பாதித்தது. நோய் தீர சிவபெருமானை வேண்டி இத்திருத்துருத்தி ஆலயத்துக்கு வந்து கோயிலின் வடபால் உள்ள புஷ்கரணியில் ஸ்நானம் செய்தால் நோய் தீரும் என நம்பி அப்படியே செய்து நலம் பெற்றார்.



சாதாரணத் தலைவலி நின்றாலே நமக்குச் சந்தோஷம்தாங்க முடியவில்லை. சுந்தரருக்குக் கடும் மேக நோய் தீர்ந்து பழைய திரு உரு கிடைக்கவே அவர் மகிழ்ச்சி யடையாமல் இருப்பாரா! மகிழ்ச்சியில் அவருக்குக் கைவந்த கலையான செந்தமிழ்ப் பா ஆக்கும் திறனால் எங்கள் ஊர் சிவபெருமானைப் பாட ஆரம்பித்து விட்டார்.

'மின்னுமா மேகங்கள்.... என்று தொடங்கும் பதிகங்கள் பதினொன்றும் கவி யழகு மிக்க கவிதைகள். புஷ்கரிணிக்கு அருகேயே சுந்தரருக்கு ஒரு தனிக் கோயில் அடையாளமாக அமைந்து அன்று முதல் குளமும் சுந்தரர் தீர்த்தமாகப் பெயர் மாறிற்று.

திருமணஞ்சேரி என்று பெயரிலேயே மணம் —திருமணம் — மணக்கும் ஊர் எங்களூரின் எல்லைக்குட்பட்டுத்தான் இருக்கிறது. கல்யாணமாகாத பெண், பிள்ளைகள் தினம் தினம் சாரி சாரியாகச் செல்கிறார்கள், அவ்வூர்க் கோவிலுக்கு. மணவாள நாதர் எனப்படும் பெருமானின் அருளால் திருமண பாக்கியமும் கிடைக்கப்பெற்று, பிறகு தம்பதிகளாய் அப்பதிக்கு வந்து நேர்த்திக் கடனை நிறைவேற்றிச் செல்கின்றனர். இது இன்றும் கண்ணெதிரில் நடக்கும் மனத்தைச் சிலிர்க்கச் செய்யும் காட்சி.

கதிரவன் பூஜித்ததற்கு அடையாளமாக, கதிராமங்கலம் எனும் ஊர் எங்கள் ஊர் அருகில் இருக்கிறது. சமீபத்தில் துர்க்கை கோயிலால் புகழ் பெருக்கிக் கொண்டிருக்கும் ஊர். கவிச் சக்கரவர்த்தி கம்பர் பெருமானை ஆதரித்த சடையப்ப வள்ளல் வாழ்ந்த வெண்ணை நல்லூரை அருகில் கொண்ட கதிராமங்கலமும் இதுதான். கம்பர் பிறந்த தேரழுந்தூர் எங்கள் தல வரலாற்றுக்கு உட்பட்ட ஊர்தான். தொழுதாலங்குடி, திருக்கொழும்பம், திருவாவடுதுறை, திருவாலங்காடு, மார்க்கண்டபுரம் குருமூலைப்பாலி, வில்லிய நல்லூர், திருவேள்விக்குடி — போன்ற எல்லா ஊர்களுமே ஐந்து குரோசம் எனப் புராணத்தில் அளவு கூறும் எங்கள் திருத்துருத்தியின் எல்லைக் குட்பட்டவைதான்.

கதிரவன் பூஜித்த பெருமைக்காக இப்போதும் எங்கள் ஊரில் கார்த்திகை மாதத்து ஞாயிற்றுக் கிழமைகளில் காவிரிக் கரையில் சுவாமி புறப்பாடு ஆகிச் சென்று தீர்த்த வாரி நடப்பதுண்டு.

வெறும் அடையாளம் உள்ள பெருமையாக எங்கள் ஊரில் காவிரி உத்திரவாகினியாக எப்போதோ ஓடியதற்கு ஆதாரம் நிறையவே இருக்கின்றன. மண் மூடிய படித் துறைகளும், பாழ்பட்டு நிற்கும் தீர்த்த வாரி மண்டபங்களும், பெரியோர்கள் — சேது பாவா, கரபாத்திரர், நாராயண சுவாமிகள், ஸ்ரீராமர் — பலரின் கரை ஓர சமாதிகளுமே இந்தப் பெருமையை மௌனமாகச் சொல்லிக் கொண்டிருக்கின்றன. நாங்களும் கையாலாகாத்தனமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். அகழ்வாராய்ச்சி செய்தால் பலப் பல புதுச் செய்திகள் கிடைக்கலாம்.

துருத்தி என்ற பெயருக்குப் பொருத்தமாய் திருநாவுக்கரசுப் பெருமானின் திருநேரிசை வெண்பாவில் ஒரு சான்று வருகிறது. 'உன்னியெப்போது நெஞ்சு ளொருவனை...' என்று தொடங்கும் பாடலில் தொடர்ந்து '...பொன்னியின் நடுவு தன்னுட் பூம்புனல் பொலிந்து தோன்றுந் துன்னிய துருத்தியானை....' என்று வருகிறது. துருத்தி என்பது ஆற்றின் நடுவில் உள்ள இட்டு என்பர். ஒரு காலத்தில் காவிரியின் நடுவில் திருத்துருத்தி ஒரு இட்டாக இருந்திருக்கலாம். அந்தச் சமயம் காவிரி உத்திரவாகினியாகவும் ஓடியிருக்கலாம்.

சமயக் குரவரில் சுந்தரர்க்கு நோய் தீர்ந்ததால் பாடினார் என்றால், மற்ற மூவரும்கூட சாதாரணமாகவே எங்களூர் இறைவரைப் பாடியிருக்கிறார்களே! ஆகவே எங்களூரில் ஒரு விசேஷம் இருக்கத்தானே வேண்டும். பட்டினத்தடிகள், அருணகிரி நாதர், போன்றோரும் பாடிப் பரவியுள்ளனர்.

எம்மூர் இறைவர்க்குச் சொன்னவாறறிவார் என்பது பெயர். இந்தப் புதுமையான அழகுத் திருப் பெயருக்குக் காரணமும் விசித்திரமானதே.

பார்வதி தேவியின் பூஜைக்கு மகிழ்ந்து —பெண் செய்கிற பூஜைக்கு எல்லாரும் மகிழத்தானே செய்கிறோம்! — சிவபெருமான் விலக்கில்லை போலும்! — சிவபெருமான் பிரத்தியட்சமாகி, அம்பிகையின் திருக் கரங்களைப் பற்றினாராம். அம்மையோ, சொன்னபடி உலகறியத் திருமணம் செய்ய வேண்டுமேயன்றி இப்படிக் கள்வர் போல் கைப் பிடித்துக் களவு மணம் செய்துகொள்ள முயலக் கூடாது என்றனராம். சொன்ன விதியைச் சொன்னபடி செய்ய ஒப்புக் கொண்டு ஊரறிய உலகறியத் திருமணம் செய்து சிவபெருமான் சொன்னவாறறியும் பெருமான் ஆனார்.

எவ்வூருக்கும் இல்லாத ஒரு தனிப் பெருமை எங்கள் ஊருக்கு உண்டு. எங்கள் குத்தாலத்து இந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க பெரும் கோயிலில் உத்தால விருட்சம் என்றொரு மரம் உள்ளது. கைலாயத்திலிருந்து சிவபெருமான் வரும்போது நிழற் குடையாக வந்து கப்பும் கிளையுமாக உள்ள

---

**அவன்:** ''பாலைவனம் மறுபடி சோலைவனம் ஆயிடுச்சு!''

**இவன்:** ''ஒரு வார லீவு முடிந்து லேடி டைப்பிஸ்ட் மறுபடி வேலைக்கு வந்திட்டாளாக்கும்!''

- உ. ராஜாஜி



இந்த மரம் ஆனி, ஆடி மாதங்களில் இறங்க வைக்கும் மணத்தோடு பூத்துச் சொரியும். ஆடு, மாடுகள் போல் பாலர்களும், பெரியவர்களும் கூட மேய்ந்து ருசிக்கும் இனிப்பு மிக்க பூக்கள் இவை. இதைப் போன்ற இனம் எந்த ஊரிலும் கிடையாது. இதன் பூக்களில் ஒன்றுகூடக் காயாவது இல்லை! இதைத் தலபுராணம் இவ்வாறு கூறும்:

'இந்த விருட்சம் சிவபெருமானுக்கு நிழல் தந்தபடி கைலாயத்திலிருந்து வந்தது. இதன் இனம் பொதிய மலைச் சாரலில் மட்டுமே உண்டு. இது காய்த்துப் பழுத்தால் உலகில் ஏதேனும் அதிசயம் ஒன்று நிகழும்'.

பழத்தையும், அதிசயத்தையும் காணக் காத்திருக்கிறோம்.

எங்களூர் ,ஆறுமுகப் பெருமான் நல்ல ஆகிருதியும், அழகும் மிக்கவர். கலைப் பிரியர்களுக்கு விருந்து. பக்தர்களுக்கு அரு மருந்து. நாறு சாந்திள முலையம்மை, அரும்பன்ன வனமுலையம்மன், மணவாள நாதர், துணைவந்த விநாயகர் — என்று கவிதை நயம் மிக்க பெயர்கள் பூண்ட கடவுளர் சிலைகள் உள்ள ஊர் எங்களூர்.

பெருமைகளை மட்டும் சொல்லிப் பலன் இல்லை. அவலங்களையும் கூறினால்தான் எங்களூர் வரலாறு முழுமை பெறும்.

பிரம்மோற்சவத்தை இழந்து விட்ட (பெருமை?) சிறுமை எங்கள் கோயிலுக்கும் உண்டு. சித்திரை மாதத்துப் பருவ விழாவில் தேரோடும் திருவிழா நின்று விட்டது. பாழான தேரைப் புதுப்பித்து ஓட்ட வக்கில்லாமல் கலைக்கு ஆசைப்பட்ட எவர்க்கோ விலைக்கு விற்று விட்டனர், கோயிலார்.

* கோயில் நிர்வாகத்தில் ஊழல் ஏற்பட்ட போதும், கோயில் சொத்துக்கள் வேற்றுச் செய்திகளில் பயன்படுத்தப்பட்டபோதும் நன்மக்கள் அரசனிடம் முறையிட்டு அரசனுடைய விசாரணையின் மூலம் கோயில் சொத்துக்களைக் காத்து வந்த செய்திகள் சில கல்வெட்டுக்கள் வாயிலாக அறியப்படுகின்றன. (* ஆதாரம்: முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் — கோயிலின் பணி, பக்கம் 19. ஆசிரியர் திரு எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், எம்.ஏ. எல்.டி.) அரசனும் இல்லை; நன் மக்களும் இல்லை. என்ன செய்ய? பாழாகட்டும் பழம் பெருமைகள்!

1907ல் திரு ஹூல்ஷ் என்ற ஒரு ஜெர்மானியரால் படி எடுக்கப்பட்ட 18 கல்வெட்டுக்கள் எங்களூர் கோயில்களில் உண்டு. இன்னமும் இருக்கலாம்.

''....கல்யாண ஆலய வாசினே நம:'' எனும் கிரந்தக் கல்வெட்டு இவ்வூர் இறைவர் திருமணம் செய்துகொண்ட சிறப்பைக் குறிப்பதா யிருக்கிறது.

எது எப்படி இருப்பினும் எங்கள் தலத்துச் சிறப்புக்கள் என்னால் எழுத முடியாதவை. அதனை முழுமையாக வாழ்த்த என் மொழியறிவு போதாதென்பதை இந்த நேரத்தில் நன்ருகவே உணர்கிறேன். மனம் நிறைய தர்ம உணர்வு; ஈயவோ ஏதுமில்லாத தரித்திரப் பொருளாதாரம் — இந்த மனக் குறையோடுதான் இந்தக் கட்டுரையை முடிக்க வேண்டியிருக்கிறது.


ரயில் பயணிகள்
அனுதாபங்கள்
ரயில்வே அமைச்சர்


அந்துலேக்கு சொந்தமான அறக்கட்டளைகள்


சுட்டுப் பொசுக்கிடுவேன், ஜாக்கிரதை!
எதிர்ப்பு
கொமெய்னி

# ஊழல் சாம்ராஜ்யம்!

சத்ரபதி சிவாஜி ஸ்தாபித்த மராட்டிய சாம்ராஜ்யம் இன்று ஊழல் சாம்ராஜ்யமாக விளங்குகிறது!

'அரசே பத்திரிகை நடத்தும்' என்று மார்தட்டிய மகாராஷ்டிர முதல்வர், 'தலைநகரை மாற்றப் போகிறேன்' என்று கோமாளித்தனம் செய்தவர்; 'பம்பாய் நடைபாதைகளைத் துப்புரவுப் படுத்துகிறேன்' என்று கூறி நூற்றுக் கணக்கான தென்னகக் குடும்பங்களைத் துரத்தி அடித்தவரின் சமீபத்திய ஜகஜ் ஜாலப் புரட்டு 20,000 மூட்டை சிமெண்ட்டை எட்டு கண்ட்ராக்டர்களுக்கு விநியோகித்ததுதான். இதில் அவருக்கு மூட்டைக்கு ரூ 40 ஆதாயம்! லாபம் தமக்கில்லை என்றும் தமக்குச் சொந்தமான ஓர் அறக்கட்டளைக்கே என்றும் சொல்கிறது ருத்திராக்கப் பூனை.

அண்டுலே செய்துள்ள காரியத்தில் எத்தனை குற்றங்கள்! பட்டியல் போடலாம்: 1. சிமெண்ட் விநியோகத்தை அதற்கென்று உள்ள இலாகா பொறுப்பில் விடாமல் தக்க காரணமின்றித் தாமே சகல அதிகாரத்தையும் மேற்கொண்டது. 2. தமக்கு வேணுமெனப் பட்டவர்களுக்கு மட்டும் சலுகை காட்டிப் பிறர் வாய்ப்பிழக்கச் செய்தது. 3. அப்படி சலுகை காட்டப்பட்ட சிலரிடம் பண வசூல் செய்தது. 4. இந்த லஞ்சத்துக்கு நன்கொடை என்று பெயரிட்ட மோசடி 5. அறக் கட்டளைக்குப் பிரதமரின் பெயரைச் சூட்டியதன் மூலம் அவரையும் அநீதிக்கு உடந்தையாக்கியது. 6. அதிகார துஷ்பிரயோகத்தினால் லட்சக்கணக்கில் சேர்ந்துள்ள பணத்தை இலக்கியமும் கலைகளும் வளரப் பயன்படுத்தப் போவதாகக் கூறி ஏமாற்றுவது. 7. சலுகையில் பெறப்பட்ட சிமெண்ட் மூட்டைகள் ரூ 175க்கு விற்கப்படுவதால் கள்ள மார்க்கெட்டுக்கு நேரடிக் காரணமாக விளங்குவது 8. இந்தக் கொள்ளை லாபம் எப்படி பங்கு போட்டுக் கொள்ளப்பட்டது என்ற கேள்விக்குறியை எழுப்பியிருப்பது!

இதெல்லாம் விடப் பெரிய கொடுமை மகாராஷ்டிரத்தின் வருவாய்த்துறை அமைச்சர் ஷாலினி பட்டீலைப் பதவி நீக்கம் செய்தது. திருமதி ஷாலினி அப்படி என்ன தப்பு செய்துவிட்டார்? அண்டுலேக்கு சொந்தமான அறக்கட்டளை ஒன்றல்ல, பல இருக்கின்றன என்ற உண்மையை உடைத்தார். இவற்றுக்குப் பணம் வசூலிப்பது கட்டிட காண்ட்ராக்டர்களிடம் மட்டுமல்ல, கூட்டுறவு கரும்புச் சாகுபடியாளர்களிடமும் தான் என்று சத்தியம் பேசினார். இதற்கும் மேலேபோய், சட்ட விரோதமாக வசூலிக்கப்பட்ட தொகைகளைக் கரும்புச் சாகுபடியாளருக்குத் திருப்பித் தந்துவிட நேரலாம் என்று நியாயத்தை எடுத்துக் கூறினார். இவ்வளவும் போதாதென்று அண்டுலே அவரது ராஜினாமாவைக் கோரியபோது ஷாலினி ராஜினாமா பண்ண மறுத்தார். இப்படி சத்தியம் பேசி அதர்மத்துக்கு வளைந்து கொடுக்காமல் இருந்ததற்கு ஷாலினி பெற்ற தண்டனை டிஸ்மிஸ் உத்தரவு!

ஏதோ அண்டுலே மட்டும்தான் இப்படி நடந்து கொள்வதாக எண்ண வேண்டாம். பெரும்பாலான மாநிலங்களில் நடப்பது லஞ்ச மாமன்னர்களின் ஊழல் சாம்ராஜ்யம்தான். அநேகமாக எல்லாப் பெருந்தலைவர்களுமே ஆளுக்கு ஒன்றிரண்டு அறக்கட்டளைகளை வைத்திருக்கிறார்கள்.

கண்ட்ரோல்களால் அவதிப்படுகின்ற தொழிலதிபர்கள்—வர்த்தகர்களுக்கு ஆசைகாட்டி அவர்களைத் தவறான பாதையில் இழுப்பது; பிறகு அவர்களிடம் மக்களுக்குப் பொறாமையைத் தூண்டிவிட்டு வர்க்க பேதத்தையும் பகைமையையும் வளர்ப்பது; இடையில் ஆதாயம் கண்டு தாங்கள் கொழுப்பது என்பதே இன்றைய ஆட்சியாளர்களின் தந்திரமாகிவிட்டது.

அண்டுலே போன்றவர்கள் உருவாக்கியுள்ள பல்வேறு அறக்கட்டளைகளால் நல்லது நடப்பதாகவே கொண்டாலும் 'ஒரு உயரிய லட்சியத்தை அடையும் மார்க்கமும் சீரானதாக இருக்க வேண்டும்' என்ற அண்ணலின் வாக்கை இன்றைய ஆட்சித் தலைவர்கள் காலின் கீழ் போட்டு மிதித்து விட்டார்கள். கூடவே அக்டோபர் இரண்டாம் தேதி நெருங்குவதால் காந்தி சமாதியில் வைக்கப் பூ வளையமும் தயாரிக்கிறார்கள்!



**கல்கி**



1981 செப்டம்பர் 13

துன்மதி ஆவணி 28

மலர்: 40 இதழ்: 7

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# வட்டமேஜை

● 39 அம்சங்களுக்குத் தலைப்புக் கொடுத்திருக்கிறீர்கள். அழகான அட்டைப் படம், அருமையான ஜோக்குகள், அர்த்தமுள்ள கார்ட்டூன் இவைகளும் சேர்ந்தால் மொத்தம் 42.
கோவை துரை பால்ராஜ்

● கிராமக் கதை, சினிமா விமர்சனம் என்று ஆங்காங்கே தலைப்புக் கொடுத்துள்ளீரே இவைகளைக் கூட இனம் கண்டு கொள்ள முடியாத எல். கே. ஜி. மாணவர்கள் என்று எங்களை நீர் சொல்லாமல் சொல்வது எங்கள் தலைவிதிதான்...!
திருச்சி-8 எஸ்.பி. முருகப்பன்

● துணுக்குகளுக்கு 'அறுவை' என்று தலைப்பிடாதது ஏனோ?
திருநெல்வேலி பாரத்வாஜன்

● முழுமுதற் கடவுள் ஸ்ரீ கணபதியின் அட்டைப் படம் கண்டு மிகவும் மகிழ்ந்தேன். விநாயகசதுர்த்தி சமயத்தில் பிரசுரிக்கப் பட்டது விசேஷம்.
சென்னை-30 ஜி. ராஜாராமன்

● முதல் பக்கத்து வித்தியாசப் படத்தில் தோன்றும் அந்தத் துணிச்சல்காரச் சிறுவன் நிற்கும் தோரணை, அவனது பார்வை... அடேயப்பா, சினிமா வில்லன் தோற்றுப் போவார்கள்!
சென்னை-61 விஜிநேசன்

● ஸ்ரீலங்கா கலவரம் கார்ட்டூனில் யானையிடம் மிதிபடுபவர்கள் தமிழர்கள் என்று குறிப்பிடப் பயமா?
சென்னை-12 கே. சுப்பிரமணியம்

● மணிக்கொடி எழுத்தாளர்கள், கணையாழி எழுத்தாளர்கள் வரிசையில் சுப்ரஜா, பாமா கோபாலன், வி. உஷா, நிவேதா நால்வரும் எழுதிய கதைகள் படித்தேன்.
விரைவில் கல்கியில் 'ஸ்வீட்டியின் இரவுகள்' ரதியின் பதில்களை எதிர்பார்க்கிறோம்.
சென்னை-1 பி. கோபிநாத்

● எல்லாம் சின்னஞ்சிறு கதைகள்; ஆனால் பொன்னான கதைகள். அதிலும், உஷாவின் கதை அட்டகாசம்.
கோவை வரளா கங்கா

● நடுப் பக்கத்தில் வெளியாகியிருந்த படக் கதை ''விடுமுறை நாளில்'' என்று ஆரம்பிக்கிறது. விடுமுறை நாளில் பக்கத்துத் தெரு பாங்க் மட்டும் எப்படித் திறந்திருக்கும்? எங்கள் வீட்டில் எங்களுக்கு ஏற்கனவே காது குத்திவிட்டார்கள். கதாசிரியர் வீணே சிரமப்பட வேண்டாம்!
பட்டுக்கோட்டை பி.எம். ராஜகோபாலன்

● இந்தியாவின் தலைசிறந்த மொழியான சம்ஸ்கிருதம் வழக்கிழந்துவரும் இந்தக் காலத்திலும் கூட, துணிந்து அம்மொழியில் படம் எடுக்க முன்வந்துள்ள ஜி. வி. அய்யர் அவர்களுக்கு வாசகர்களின் ஒட்டுமொத்தமான பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.
மதுரை அபராஜிதன்



● 30–8–81 கல்கி உண்மையிலேயே மிக மிக வித்தியாசமான இதழ் என்பதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.
ஒரு சைவப் பத்திரிகையில் தயிர்க் கோழி செய்யும் முறையை வெளியிட்டுப் பெரிய புண்ணியம் தேடிக் கொண்டு விட்டீர்கள்.
ருசியாகத்தான் இருக்கிறது கேட்பதற்கு!
கோழிக்கோடு அழகனார்

● ஒவ்வொரு கதைக்கும் கட்டுரைக்கும் தலைப்பு தந்ததற்குத் திருஷ்டி பரிகாரமாகவா 'கர்ஜனை' பட விமர்சனத்துக்குப் படத்தின் பெயரையே போட மறந்து விட்டீர்?
கண்ணம்பாளையம் பொன் ஜெயசிங்

(அச்சுப் பிழை. கொஞ்சம் பிரதிகள் அச்சானதுமே திருத்தப்பட்டது. – ஆர்.)

● கர்ஜனை படத்தின் விமர்சனம் என்றவுடன் உமது விமர்சகர் ஆரம்பத்தில் சிங்கமாகக் கர்ஜித்து, கடைசியில் பூனையாக மாறி மியாவ் என்று கத்துகிறாரே வா ரே வா, பட ஆளய்யா. அ ரு மை.
சிவகாசி கே. ராகவன்

● சிரிப்புத்தான் வருகிறது! தமிழ்த் திரையில் இப்போதுதான் ''சிவப்பு'' நுழைகிறதாம், 'சிவப்பு மல்லி' மூலம்! 25 வருடங்களுக்கு முன்பே எஸ் பாலசந்தர் டைரக்ட் செய்து, கே. ஆர். ராமசாமி நடித்த 'அவன் அமரன்' இந்த வர்க்கப் போராட்டத்தைச் சித்திரித்ததையும், தொடர்ந்துவந்த படங்களையும் பாவம், நேற்று வந்த சிந்து ஜீவாக்களும் நளினி சாஸ்திரிகளும் எங்ஙனம் அறிய முடியும்?
சென்னை-33 விசாகராஜன்

● அமரர் கல்கி பற்றி ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெறும் முதல் மனிதர் பூவண்ணன் அல்ல. டாக்டர் மீனாட்சி முருகரத்தினம் 1975ல் 'கல்கியின் சிறுகதைகள்' என்ற தலைப்பில் ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார்.
மதுரை-21 புலவர் நா. வேலவன்



× டாக்டர் நடராஜன்

# போராடுகிறான்!

இரயில் பெட்டித் தொழிற்சாலையில் 'ஃபர்னஸ்மேனா'கப் பணிபுரிபவர் கல்யாணராமன். 1966 நவ. மாதம் அவருக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்தன. ஒரு பெண், ஓர் ஆண். கர்ப்பத்திலேயே சிக்கல். பையனுடைய கால்கள் இரண்டும் பெண்ணின் கழுத்தைச் சுற்றி இறுகியிருந்ததாம். எனவே இரு குழந்தைகளும் கோளாறுடன் பிறந்தன. (பெண் குழந்தைக்குக் கழுத்திலே நேர்ந்த கோளாறைச் சரிபண்ணியாகிவிட்டது.) ஆனால் பையனுக்குக் காலில் ஏற்பட்ட ஊனம் —பை லேடரல் க்ளப் ஃபுட் — இத்தனை வருடங்களாகியும் சரியாகவில்லை.

குழந்தை பிறந்த மூன்றாவது நாளே சிகிச்சை ('Manipulate) செய்தார்கள். பிறகு ஒவ்வொரு வருடமும் தொடர்ந்தாற் போல — 1969, 70, 71, 73 என்று ஆபரேஷன் செய்து கொண்டே வந்திருக்கிறார்கள். பணக் கஷ்டம், மனச் சோர்வு: சக ஊழியர்களின் கேலி (''என்னய்யா அதிசயமாய்ப் பிள்ளை! நொண்டியாய் இருந்தால்தான் என்ன!''); இடையே தமக்கே ஒருமுறை ஏற்பட்ட விபத்து — இவையெல்லாம் மீறி எப்படியாவது பையனைக் குணப்படுத்தியே தீருவது என்ற வெறியில் டாக்டரிடம் காண்பித்து வருகிறார் கல்யாணராமன். சோர்வடைந்த பல சமயங்களில் பண உதவியோடு தட்டிக்கொடுத்து உற்சாகமூட்டியவர் இராம அரங்கண்ணல் என்று நன்றியோடு நினைவுகூர்கிறார். மகனின் நிலை பற்றி அறிந்துகொள்ள மருத்துவ சம்பந்தமாகப் பழைய புத்தகம் வாங்கிப் பார்த்திருக்கிறார். துவக்க காலத்திலேயே சிகிச்சை தொடங்கினால் குணப்படுத்திவிடலாம் என்று அதிலே இருக்கிறது...

இருந்தும் இந்தப் பையன் செந்தில்குமாருக்குச் சிகிச்சை முடியவில்லையே? ரண கிசிகிச்சைக்கு முற்றுப்புள்ளியே கிடையாதா? கடைசி ஆபரேஷன் மே மாசக் கடைசியில் நிகழ்ந்திருக்கிறது. வலது காலில் கட்டுப் போட்டிருக்கிறார்கள். இடது காலில் மீண்டும் ஆபரேஷன் செய்ய வேண்டுமாம்.

செந்தில் குமார் பத்தாவது வகுப்புப் படித்துக் கொண்டிருக்கிறான். படிப்பில் முதல் ஆறேழு 'ராங்கு'க்குள் வந்துவிடுவானாம். முகத்தில் சூட்டிகை தெரிகிறது.

''வலி இருக்கிறதா?''

''ஊன்றுகோல் வைத்து நடக்கிறேன். அவ்வளவு வலி இல்லை. ஆனால் குதிகால் அழுந்தும்போது லேசான வலி இருக்கிறது.''

''இவ்வளவு வருஷமா ஆபரேஷன் செய்து வருகிறீர்களே கொஞ்சமாவது குணம் தெரிகிறதா?''

டாக்டர் நடராஜனைக் கையெடுத்துக் கும்பிடுகிறார் தகப்பனார். ''சும்மா சொல்லக் கூடாது. நிச்சயம் குணம் இருக்கு. முன்னைக்கு இப்போது பரவாயில்லை. ஆனால் முழுக்கக் குணம் இல்லையே!''

அவர் குரலில் ஒரு சோகமும் அலுப்பும் தெரிகிறது. '15 வருஷத்தில் 10 ஆபரேஷனா! என்ன சார் இது!'

நமக்கும் ஓர் அடிப்படையான சந்தேகம் தோன்றுகிறது. Clubfoot- சாதாரண ஜனங்கள் பேசிக் கொள்வது போல 'கோணைக் கால்' — விரைவில் குணப்படுத்திவிடக்கூடிய ஒன்று. அதுவும் மருத்துவ வசதி நவீனமாக வளர்ந்து வந்திருக்கிற இந்த நாளில் இத்தனை சிரமமா? இவ்வளவு காலமாகுமா?

சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ள முட நீக்கு ரண சிகிச்சை நிபுணர் டாக்டர் எம். நடராஜனைச் சந்தித்துப் பேசுகிறோம். மூன்று முக்கிய விதிகளை இதில் கடைப்பிடிப்பது அவசியம் என்கிறார்.



× கல்யாணராமன்

× செந்தில் குமார்



1. துவக்கத்திலேயே காண்பித்தல்

2. தொடர்ந்து வருவது.

3. ரண சிகிச்சைக்குப் பிறகும் வந்து போவது. (follow up)

மூன்றுவது இந்த 'ஆர்த்தோபீடிக்' சிகிச்சையில் ரொம்ப முக்கியம். இல்லாவிட்டால் திருப்பிக்கொண்டு விடும். (relapse)

சரி, செந்தில் குமார் கேஸ், டாக்டர் சொன்ன எல்லா விதிகளையும் கடைப்பிடித்தும்கூட பூரண குணம் இல்லையே? புகைப் படத்தைக் காண்பிக்கிறோம்.

''க்ளப் ஃபுட்டில் பல வகை உண்டு. அதில் அபூர்வமாக ஒரு வகை. Arthro criposis multiplex Congenita. multiplex என்ற பெயருக்கு ஏற்றமாதிரி பல மூட்டுக்களில் திசுக்களின் இறுக்கம் அப்நார்மலாக இருப்பதால் கோளாறு ஏற்பட்டுள்ளது. ஒவ்வொன்றையும் ரணசிகிச்சை செய்துதான் குணப்படுத்த (Soft tissue operation) வேண்டும். வேறு வழியே இல்லை.

''மேலும் இன்னொன்று. இந்தப் பையன் விஷயத்தில் திசுக்கள் உற்பத்தியிலேயே பிறவிக் குறை இருக்கிறது. வளரும் சக்தி சற்றுக் குறைவு. எலும்பு வளர்ச்சிக்குச் சமமாகத் தசை வளர்ச்சி இல்லாததால் கோளாறு மறுபடியும் வரக் காரணமாகிறது.''

—சரி, இதுதான் விதி என்று ஆபரேஷன் பண்ணுமலே விட்டுவிட்டால்?

''ரிலாப்ஸ் ஆகிவிடும். நிலைமை ரொம்ப மோசமாகும். வேறு வழியே இல்லை. — ஆபரேஷன் தவிர. பொதுவாக ஆர்த்தோபீடிக் கேஸ்களே எங்களுக்கு ஒரு சவால்தான். இதை இன்னும் பெரிய சவாலாக ஏற்றுக் கொண்டு — இயன்ற அளவு குணப்படுத்துவோம்'' என்று முடித்தார்.

பிள்ளையிடம் அதிக பாசம் கொண்டுள்ள ஓர் ஏழைத் தகப்பனர்; உடலில் ஊனம் இருந்தாலும் உள்ளத்தில் மலர்ச்சியும் உறுதியும் உடைய பையன்; வெளி நாடுகளில் பட்டம் வாங்கிய பிரபல மருத்துவ நிபுணர்—எல்லாருமாகச் சேர்ந்து போராடுகிறார்கள்.

- பேட்டி: வாதூலன்

# சங்கர்லால்

(முன் குறிப்பு: தமிழ்வாணன் சங்கர்லாலுக்கும் இப்படத்தின் பெயருக்கும் சம்பந்தமில்லை)

மறைந்த டைரக்டர் டி.என். பாலு முக்காலில் விட்ட படத்தை கமல் அண்ட் பார்ட்டி முழுசாகத் தந்திருக்கிறார்கள். படத்தில் முழுமையில்லை. முழுக்க முழுக்கப் பொழுது போக்குப் படம். பொழுது போகிறது. கமல் கமல் நடித்தது. அப்பா கமல் — மகன் கமல்.

அப்பா கமல் மிக இயல்பாக ஒரு கொலையில் மாட்டிக் கொண்டு 15 வருடம் வீணாகச் சிறைக் கம்பி களை எண்ணச் செல்கிறார். அம்மா, மகன், மகள் மூவரும் வசதியாய்ப் பிரிந்து போகிறார்கள். அப்பா கமல் விடுதலையாகி வந்து மேலும் சோதிக்காமல் அனைவரும் படம் முடிவதற்குள் ஒன்று சேர்ந்துவிடுகிறார்கள். அப்பா கமல் கடைசியில் உயிரை விட்டிருக்க வேண்டாம்.

துப்பறிந்து தங்க மெடல் வாங்க நினைக்கும் ஸ்ரீதேவியும், பிக்பாக்கெட் - கம் - கேபரே டான்ஸர் சீமாவும் துடிப்பாக நடிக்கிறார்கள். சீமா அநாயாசம். இருவரும் தலா இரண்டு நடனங்கள் இளமை ததும்ப ஆடுகிறார்கள்.

கதையை வளர்க்கும்பொருட்டு ஸ்ரீதேவியை வில்லன் கடத்த, ஸ்ரீதேவியோ வில்லனுடன் சேர்ந்துகொண்டு அப்பாவை மிரட்ட ஒரே ரகளைதான். அப்பா கருணி. எல்லாம் சுவையாகப் போனாலும் படத்தில் வேகம் குறைவு.

இளையராஜாவும் கங்கை அமரனும் சேர்ந்து அமைத்த இசையில் புதிதாய் ஒன்றுமில்லை. என்.கே. விஸ்வநாதனின் கேமரா புதுக் கோணத்தில் பார்க்கிறது.



மகன் கமல் வில்லன்களுடன் அலுக்காமல் சண்டை போடும் நேரம் தவிர சதா சர்வ காலமும் ஸ்ரீதேவியுடன் ஆடிப் பாடுகிறார். அன்று Viceversa சமீப காலமாய் மேலே போய்க் கொண்டிருக்கும் கமல் இப்படத்தில் நின்று ஓய்வெடுக்கிறார்!

| | |
|---|---|
| கொடுப்பது | ரூ. 3—00 |
| கிடைப்பது (கதை, கமல், ஸ்ரீதேவிக்கு தலா 0—25 சீமா, கேமரா ரயில் சண்டைக்குத் தலா 0—35 | ரூ. 1—80 |
| தண்டம் | ரூ. 1—20 |

—நளினி சாஸ்திரி

# பொன்மனச் செம்மலும் பொன்விழா ஆண்டும்

## 5

"நந்தா விளக்கனைய நாயகன்" என்று காவியக் கதாநாயகனைக் கவிசிரேஷ்டர்கள் போற்றுவது மரபு.

நாடோடி மன்னன் மூலம் மக்கள் திலகம் ஏற்றிய தீபம் ஒரு நந்தா விளக்கு என்றே கூற வேண்டும். இரு கோணங்களில் இது பொருந்தும்.

ஒன்று: அவர் அடைந்த புகழ்.

மற்றது: தமிழ்ப் பட உலகம் பெற்ற சிறப்பு.

"நாடோடி மன்னன்" படம் 'காஸ்ட்யூம் ஸப்ஜெக்ட்' படமாகும். அதாவது ராஜா—ராணி வரும் கதையம்சமுள்ள படம் ஆகும். "சமூகக் கதைப் படங்களில் மக்கள் திலகம்



ப. நீலகண்டன்  ஆர். எம். வீரப்பன்

நடித்தால் பிரகாசிப்பாரா?" என்று ஒரு குரல் சில வட்டாரங்களில் ஒலிக்கத் தொடங்கியது. எதிர்ப்புக் குரல்தான்!

எதிர்ப்புத்தானே இவருக்கு ஏற்றமுண்டாகத் தூண்டி விடுகிற உபகாரி! ஒரு பிடி பிடித்தார். ஒரு கலக்குக் கலக்கிவிட்டார்.

"திருடாதே" என்ற சமூகக் கதைப் படம் வெளிவந்தது. சக்கைப் போடு போட்டது.

தோற்றத்தில் செய்து கொண்ட மாற்றம் ஏற்றத்துக்கு அடிகோலிற்று.

'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்பார்கள். 'காஸ்டயூம்'களின் துணை பலம் இல்லாமல், மாட மாளிகை 'ஸெட்-அப்' இல்லாமல், சாதாரண உடை, சாதாரண ஸெட்கள், மற்றும் சாதாரணவெளிப்புறங்கள் ஆகியவற்றின் அமைப்புடன், தமது திறமைக்கும் ஆற்றலுக்கும் மட்டுமே உள்ள முக்கியத்துவத்தை வெளிக் காட்டி வெற்றி கண்டார், 'திருடாதே' படத்தில். பெரிய சாதனை இது.

இந்தச் சாதனைக்கு இடையில் ஏற்பட்ட சோதனைதான் கால் எலும்பு முறிவு.

சீர்காழியில் ஓரிடத்தில் நடித்துக் கொண்டிருந்தபோது ஒரு வீரக் காட்சியில் விளைந்த சோதனை இது. பல மாதங்கள் படங்களில் நடிக்க முடியாமல் வேதனைக்கு ஆட்பட்டார்.

"இனி இவரால் நடிக்கவே முடியாது" என்றும், "நடக்கவே முடியாதவர் எங்கே நடிக்கப் போகிறார்!" என்றும் எதிர்த் தரப்பில் ஒரு மாதிரியாகப் பேசப்பட்டது.

எதையும் தாங்கும் இதயத்தைப் பேரறிஞர் அண்ணா அவர்களின் அடியொற்றிப் பெற்றிருந்த எம். ஜி. ஆர். அவர்கள், தம்



மால் நடக்கவும் நடிக்கவும் மட்டுமல்லாமல் தாண்டவும் தாவவும் பாயவும் மோதவும் கூட முடியும் என்பதை விரைவில் நிலைநாட்டி விட்டார்.

'திருடாதே' படப் பிடிப்புத் தொடங்கிய பிறகு ஏற்பட்ட நிகழ்ச்சி 'கால் முறிவு'. கால் குணமாவதற்குள் வளர்ந்து விட்டிருந்த கால வேகத்தில் ஏற்கெனவே இவரால் வளர்த்து ஆளாக்கப் பட்டிருந்த பலர் வெவ்வேறு வகையில் வளர்ச்சி பெற்றிருந்தார்கள். அவர்களில், சரோஜா தேவியும் ஒருவராவார்.

'நாடோடி மன்னன்' படத்தில் மக்கள் திலகம் அவர்களால் அறிமுகப்படுத்தப்பட்ட

வித்துவான் வே. லட்சுமணன்

30–8–81 இதழில் வெளியாகியிருக்கும் எனது 'பேட்டி'யைப் படித்தேன். என்னுடைய சரித்திர அறிவைப் பற்றி நான் தற்பெருமை அடித்துக் கொள்வதாக எண்ணும்படி பேட்டி அமைந்திருக்கிறது. 'சுத்தப் பேத்தல்' என்ற மாதிரி சொற்கள் என் அகராதியில் இல்லை.

சாகித்ய அகாதமியிடமிருந்து நான் விருதை யாசிப்பது போலவும் இது வரை கிடைக்காததால் ஏங்கிக் கிடப்பது போலும் எண்ணத்தை ஏற்படுத்துகிறது. பரிசு எதையும் நான் என்றும் எதிர்பார்த்ததில்லை.

எனது சகோதர எழுத்தாளர்களைப் பற்றி நான்கேவலமாகப் பேசியதாகவும் கட்டுரையில் காணப்படுகிறது. அப்படி எதுவும் நான் சொல்லவில்லை.

சென்னை-17 சாண்டில்யன்

வர் சரோஜா தேவி. சுருங்கச் சொன்னால், தமிழ்த் திரை உலகின் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் சுடர்க் கொடியாகச் சரோஜா தேவி ஜொலிக்கும் நிலை ஏற்பட்டதற்குக் காரணகர்த்தா எம். ஜி. ஆர். அவர்களே ஆவார்.

'திருடாதே' படத்தின் கதாநாயகியும் இவரே. மக்கள் திலகம் அவர்களாலேயே இந்த வாய்ப்பையும் பெற்றிருந்தார். இப் படத்தின் இயக்குனர், மதிப்புக்குரிய திரையுலக ஜாம்பவான் ப. நீலகண்டன் அவர்கள்.

சரோஜா தேவி நாடோடி மன்னனில் முக்கிய வேடம் ஏற்று நடிப்பதற்குத் தகுதியுடையவர் என்று மக்கள் திலகம் கணித்த முடிவை ஆதரித்தவர் திரு ப. நீலகண்டன் அவர்கள். மொழி அறிவு, கலை நுட்ப அறிவு இரண்டிலுமே ஏற்றம் மிகுந்த ப. நீலகண்டன் அவர்கள் மக்கள் திலகத்தின் பாராட்டுக்குரியவர்; அவருடைய பதினெட்டுப் படங்களில் இயக்குனராகப் பணியாற்றியவர்....

சமீபத்தில் ஒரு நாள் இவரும் நானும் பேசிக் கொண்டிருந்தோம். அப்போது இவர் சொன்னார்:

''சரோஜா தேவி புது முகமாக இருந்த போது தனது சொந்தப் படத்தில், தனது டைரக்ஷனில் தனது பாத்திரத்தின் நாயகியாக அவரைத் தேர்ந்தெடுத்து, வெற்றி காணச் செய்தார் எம். ஜி. ஆர். அவர்கள்.

''இன்றைய பிரபல நடிகர் சிவகுமாரைத் தன் பாத்திரத்தின் சகோதர பாத்திரமாக நடிக்கவைத்து 'காவல்காரன்' படத்தின் மூலம் அவருக்குச் சிறப்புத் தேடித் தந்தார்.

''புகழ் பெற்று–விளங்கும் லட்சுமியை முழுமையான கதாநாயகியாகக் 'கணவன்' படத்தில் ஒளிரச் செய்தார்''... என்று பல மேற்கோள்களைச் சொல்லிக் கொண்டே போனார்.

மேலும் ஒரு விசேடமான கருத்தையும் என்னிடம் கூறினார் திரு ப. நீலகண்டன் அவர்கள்.

''எந்தக் கோணத்தை எடுத்துக் கொண்டாலும் சினிமாவைப் பற்றி முழுக்க முழுக்க இலக்கண பூர்வமாக அறிந்தவர்எம்.ஜி.ஆர். அவருக்குத் தெரியாதது என்று எதுவும் இல்லை'' என்று அவர் குறிப்பிட்டதை நான் ரசித்தேன். ஏனென்றால் அந்தக் கருத்து என் கருத்தும் கூடத்தான்; மேலும் எம்.ஜி. ஆர். அவர்களுடன் பழகிய அனைவருக்கும் தெரிந்த உண்மையே அது.

ஆனாலும் 'வசிஷ்டர் வாயால் பிரம்மரிஷி' என்று சொல்லப்படுவது விசேடமல்லவா?

மக்கள் திலகம் கால் முறிவு குணமாகி, மீண்டும் நடிப்பதற்குரிய தகுதியை அடையும் முன்னதாக சரோஜா தேவி மிகவும் உயர்ந்து விட்டார்!

'உயர்ந்துவிட்டார்' என்றால் 'கால்ஷீட்'டுகள் கிடைப்பது கஷ்டம் அல்லவா! படப் பிடிப்பு நின்றிருந்த 'திருடாதே' படத்தின் கதாநாயகி, வேறு பல படங்களில் கதாநாயகியாகி, அந்தப் படங்களுக்கு 'கால்ஷீட்' கொடுத்திருந்த காரணத்தால் மீண்டும் புதிதாக ஆரம்பமான 'திருடாதே' படப் பிடிப்புக்குக் கால்ஷீட் தருவது என்பது சிக்கலாக அமைந்தது.

வேறு படங்களில் நடித்துவிட்டுப் பிறகு 'திருடாதே' படத்தில் நடிக்க வருவார். அந்த நேரத்தில் அவரது கால்ஷீட்டைப் பயன்படுத்திக் கொள்ளாமற் போனால் இழப்புத்தான் வரும். ஆதலால் கதாநாயகனை எம். ஜி. ஆர். முதற்கொண்டு எல்லோருமே சரோஜா தேவியை அனுசரித்துப் படத்தை முடிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.



## பல்கலைப் பாவை

உத்ராவின் காமிராவுக்குள் சிக்கி வண்ணப் படமாக அவதாரமெடுத்து இவ்விதழ் மேலட்டையை அலங்கரிப்பவர் குமாரி சிந்தூரி.

குஜராத்தி பாணியில் புடைவை உடுத்தியிருந்தாலும் இவர் மராத்திய வகுப்பைச் சேர்ந்தவர். இந்தப் பல்கலைப் பாவைக்குத் தெரிந்தவை: கராட்டே, ஸ்கேட்டிங், நடனம், சமையல், மாடலிங், ஓவியம்.

பி.யூ.சி. முடித்து இசைக் கல்லூரியில் சேர்ந்த இவருக்கு நடனத்திலும் ஆர்வம் பிறந்தது! பரதம் தவிர, பஞ்சாபி, ராஜஸ்தானி, குச்சுபிடி கதக்களி ஆகிய எதையும் விட்டு வைக்கவில்லை.

இத்தனை கற்றும் மனசுக்கு இதமளிப்பது சமூகப் பணியாற்றுவதும் நாட்டுப் பாடல்களைச் சேகரித்துப் பாடுவதும்தான் என்கிறார்! பேட்டி: சிக்கி

## பிறருக்கு உபதேசம்

தோஷமுள்ளவரிடம் அதை எடுத்துக் காட்ட வேண்டுமானால் நமக்குப் பூர்ண யோக்யதை இருக்க வேண்டும். நம்மிடமே ஏராளமான தோஷங்களை வைத்துக்கொண்டு இன்னொருத்தருக்கு உபதேசம் செய்தால் அது பிரயோஜனப்படாது. சில சமயங்களில் நாம் சொல்வதாலேயே அவர்கள் முன்னைவிட வீம்பாகத் தங்கள் தவற்றை வெளிப்படச் செய்யவும் தொடங்கலாம். 'நமக்கு யோக்யதை இருக்கிறது. ஸ்தானம் இருக்கிறது நம் வார்த்தை எடுபடும், என்று நிச்சயமானாலே பிறருக்கு உபதேசிக்கலாம்.

ஒருவரது நல்ல அம்சத்தைக் கொண்டாடுவதால் அவருக்கு மேலும் உற்சாகம் உண்டாகிறது. அந்தக் குணங்களை விருத்தி செய்து கொள்கிறார். ஆனாலும் ஒருவரைப் புகழுவதிலும் நமக்குக் கட்டுப்பாடு இருக்க வேண்டும். ஒரேயடியாக ஸ்தோத்திரம் செய்து ஒருவரை அகங்காரத்துக்கு ஆளாக்கி விடக் கூடாது. புகழ்ச்சி ஒரு நுட்பமான விஷயம். இதனால்தான் பெரியோர்கள் ''ஈசுவரனையும் குருவையும் மட்டுமே நேரில் துதிக்கலாம். பந்துமித்திரர்களை நேரில் புகழாமல் மற்றவர்களிடமே போற்றிப் பேச வேண்டும். வேலையை முடித்த பின்னரே ஊழியரைப் பாராட்டலாம். பிள்ளையை ஒரு போதும் புகழக் கூடாது'' என்றார்கள்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்



---

எதற்காக இதை இங்கே குறிப்பிட்டேன் என்பதற்குக் காரணம் உண்டு. காலம் விசித்திரமானது என்றும் அதன் வளர்ச்சி வேகமானது என்றும் ஏற்படும் மாற்றம் விநோதமானது என்றும், ஆனால் அத்தனையும் இயற்கையே என்றும் அறிவதற்கு இந்த 'சரோஜா தேவி சம்பவம்' ஒரு நல்ல எடுத்துக்காட்டு.

''திருடாதே'' படத்துக்குப் பிறகு எம்.ஜி. ஆர். நடித்த பல படங்களில் ஏற்றம் கூடி வந்தது. இந்தப் படங்களின் வரிசையில் இடம் பெற்றவை 'குடும்பத் தலைவன்', 'தாயைக் காத்த தனயன்', 'பணத்தோட்டம்', 'பரிசு' 'பெரிய இடத்துப் பெண்', 'வேட்டைக் காரன்', 'தெய்வத் தாய்', 'படகோட்டி' 'ஆயிரத்தில் ஒருவன்', 'எங்க வீட்டுப் பிள்ளை' 'அன்பே வா', 'முகராசி', 'பெற்றால்தான் பிள்ளையா?' முதலியவை.

இவை யாவுமே மக்கள் திலகத்தின் நடிப்புக்கு முத்திரை பொறித்தவை; வசூலில் 'சாதனை' செய்தவை; ரசிகர்களின் ஆர்வத்துக்கு எல்லை காண முடியாமல் வரவேற்புப் பெற்றவை.

''சமூகக் கதையம்சம் கொண்டு மக்கள் திலகம் அவர்களை வெள்ளித் திரைக் கதாநாயகராக மட்டுமல்லாமல், சமுதாய மறுமலர்ச்சியின் வெற்றி நாயகராகவும் உருவாக்கிய படங்கள் இவை. குறிப்பாக ''தெய்வத் தாய்'' மக்கள் திலகம் அவர்களை நடிப்பின் சிகரத்துக்கு உயர்த்திற்று. ''எங்க வீட்டுப் பிள்ளை'' இரட்டை வேடத்தில், மக்கள் திலகம் நடிக்கவும் புதிய குணச்சித்திரத்தில் ஒளிரவும் வாய்ப்பு ஏற்படுத்தியது.

இவற்றைத் தொடர்ந்து வந்த படங்களில் 'காவல்காரன்' குறிப்பிடத் தக்க ஒரு படமாகும்.

1967ம் ஆண்டு வெளிவந்த படம் இது. இன்றைய செய்தி, அறநிலைய அமைச்சரும், மக்கள் திலகத்தின் இதயத்தில் தனி இடம் பெற்றவரும், தேர்ந்த அறிவாளருமான திரு ஆர். எம். வீரப்பன் அவர்களின் படம் இந்தக் 'காவல்காரன்'.

1953 என்று நினைக்கிறேன். எம். ஜி. ஆர். நாடக மன்றத்தின் நிர்வாகியாகப் பொறுப்பேற்றுப் பிறகு எம்.ஜி.ஆர். பிக்சர்ஸ் நிறுவன நிர்வாகியாகி, ஒரு புறம் கலைத் துறையிலும், மறுபுறம் பெரியார், பேரறிஞர் ஆகியோரின் அறிவுப் பாசறையில் நெருக்கமான தொடர்பு கொண்டு, மக்கள் திலகம் அவர்களின் எழுச்சிக்கும், ஏற்றத்திற்கும் உற்ற துணையாளராக அரசியல் துறையிலும் விளங்கியவர் திரு வீரப்பன் அவர்கள்.

எந்நேரமும் எம். ஜி. ஆர். அவர்களையே சிந்தித்து, அவருடைய எண்ணங்களின் கோட்பாடுகளின் பிரதிபலிப்பாகச் செயலாற்றும் கர்மசீலரான வீரப்பன் அவர்கள் 'தெய்வத் தாய்', 'நான் ஆணையிட்டால்' என்ற இரண்டு படங்களை எடுத்துத் தொடர்ந்து, 'காவல் காரனை' ஆரம்பித்தார்.

இதன் வளர்ச்சிக்காலத்தில் மக்கள் திலகத்துக்கு உண்டான ஓர் ஆபத்து நாட்டையே கலக்கிய ஒன்றாகும். ஆம்; துப்பாக்கியால் மக்கள் திலகம் சுடப்பட்ட நிகழ்ச்சியையே சொல்லுகிறேன்.

நடிப்புக்கு உறுதுணை பேச்சு அல்லவா?

ஏற்கனவே காலுக்கு வந்தது ஆபத்து; பிறகு அகன்றது.

இப்போது பேச்சுக்கு வந்தது ஆபத்து!

மாதக் கணக்கில் காலம் நீண்டது, மக்கள் திலகம் குணம் பெற.

உயிராபத்து விலகி, உடல்நலமும் ஏற்பட்டது. ஆனால் வலுவாகப் பேச முடியவில்லை.

எந்த நாவிலிருந்து எழுகின்ற வீர கர்ஜனையை, வெண்கல நாதத்தை லட்சக் கணக்கான ரசிகர்கள் கேட்டுப் பூரித்தார்களோ, அவர்களுக்கு மக்கள் திலகம் அவர்களால் அந்தப் பழக்கப்பட்ட வீர முழக்கத்தை வழங்க முடியாமல் சங்கடம் உண்டாயிற்று!

(தொடரும்)

படம் உதவி: **பிலிம் நியூஸ் ஆனந்தன்**

# Round up



குல்லாய் அணிந்திருப்பது யார் தெரி-கிறதா? கமல்தான்!

'எல்லாம் இன்பமயம்' — விரைவில் வெளி வரவிருக்கும் படம். இதில் கமல், (1) அப்பாவி பட்டிக்காட்டான், (2) பட்டணத்து நாகரீக இளைஞன், (3) வயதான ரிக்ஷாக்காரன், (4) பாப் பாடகன், (5) மூதிய வக்கீல், (6) ரௌடி, (7) டிராகுலா, (8) வயதான கன்னட பாய் (படம்) என்று எட்டு விதமான பாத்திரங்கள் ஏற்று நடிக்கிறார். ஹீரோயின்? கமலின் ஃபேவரிட் (எனச் சொல்லப்படும்) மாதவிதான்!

—எஸ். சந்திரமௌளி

சபையில் எல்லோரும் செம்மங்குடி பக்தர்கள்; லால்குடி ரசிகர்கள். இடம்: கிருஷ்ண கான சபை. அன்று செம்மங்குடி பாடியவையெல்லாம் அவருடைய ஸ்பெஷாலிட்டிகள். ராமபத்ரன் ஜமா சேர பிரமாதப் படக் கேட்பானேன்?

புதுமை: லால்குடிக்குப் பதில் மகன் ஜி. ஜே. ஆர். கிருஷ்ணனின் வயலின். பக்க வாத்தியம் வாசிப்பது முதல் தடவை என்றாலும் கிருஷ்ணனுக்கு மேடை ஏறுவது என்பது புதிய அனுபவமல்ல. ஏற்கனவே தகப்பனாரோடு சேர்ந்து வயலின் கச்சேரிகள் பல நிகழ்த்தியாகிவிட்டது. அது இன்டர்னல் அஸெஸ்மெண்ட்!

இப்போது நடந்தது எக்ஸ்டர்னல் அஸெஸ்மெண்ட்! இதிலும் திருஷ்டி படப் போகிறதே என்று சில மார்க்குகளைக் குறைத்து 95 சதத்துக்குக் குறையாமல் கொடுத்திருப்பார் செம்மங்குடி என்பதை அவரது ஏகப்பட்ட பேஷ்களும் பலேக்களும் சபாஷ்களும் தெளிவாக்கின!

புகைப்படம்: உத்ரா



கே. ராமமூர்த்தி



செம்மங்குடி, லால்குடி கிருஷ்ணன்

அமெரிக்காவில் கூல்பிரித் வட்டம் என்றோர் இலக்கிய அமைப்பு இயங்குகிறது. ஒரு கவியின் இலக்கியங்களில் இருபது ஆண்டுகளுக்கு மேலாக ஊறித் திளைத்து அக்கவி இன்பத்தைப்பரப்புவதில் பெரும் பணியாற்றியுள்ளவர்களுக்கு கூல்பிரித் வட்டம் தகுதிச் சான்று விருது வழங்குகிறது.

அண்மையில் இந்த அமைப்பு பாரதி இளைஞர் சங்கத்தின் தலைவர் கே. ராமமூர்த்திக்கு இந்த விருதை வழங்கிக் கௌரவித்தது. ஸான்ஃபிரான்ஸிஸ்கோவில் நடந்த ஐந்தாவது உலகக் கவிகள் மகாநாட்டுக்கு கே. ராமமூர்த்தி அனுப்பி வைத்த பாரதி பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரையே இந்த விருதை அவருக்குப் பெற்றுத் தந்துள்ளது.

—குட்டிகிருஷ்ணன்

விஸ்வ ஹிந்து பரிஷத் கிருஷ்ண ஜயந்தியையொட்டி ஒரு போட்டி வைத்தது. எல்.கே.ஜி. முதல் ஐந்தாம் வகுப்பு வரை குழந்தைகள் கிருஷ்ணன், ராதையாக வேடம் போட்டுக் கொண்டு வந்தனர். மூவாயிரம் குழந்தைகள் (1500 கிருஷ்ணன்கள், 1500 ராதைகள்) பங்கு கொண்ட இந்தப் போட்டி வள்ளுவர் கோட்டத்தில் நடந்தது.

பெற்றோர்கள் குழந்தைகளுக்கு ஒப்பனை செய்து அழைத்து வருவதில் ரொம்ப உற்சாகம் காட்டினார்கள். காலை ஒன்பது மணிக்கே குழந்தைகளுடன் வரச் சொல்லப்பட்டாலும், போட்டி நடந்ததோ மதியம் தான். வந்த குழந்தைகள் பசியால் வாடின. வெற்றியாளருக்கு மட்டுமின்றிப் பங்கேற்ற அனைவருக்குமே சின்னதாக ஒரு பரிசு கொடுத்திருந்தால் பசி, தாகம் பறந்துபோயிருக்குமே!

—சிக்கி

படம் உதவி: வேப்பத்தூர் கிருஷ்ணன்

ராதா - கிருஷ்ணன் வேடத்தில் குழந்தைகள்



## 11

இன்னும் எத்தனை நேரத்துக்கு இப்படி யோசனை இல்லாமல் நடக்கப் போகிறோம் என்று திகைப்புடன் சாந்தி நின்றாள். இப்பொழுது நடுத் தெருவுக்கு விரட்டியடிக்கப் படுகிற அளவுக்கு நாம் என்ன தப்பு செய்தோம் என்று ஆத்திரமும் கோபமும் ஏற்பட்டது. ஃப்ளாட்டுகளின் அமைப்பில் வீட்டுக்கு ஒரே கதவு. அதை அவன் பிடிவாதமாகத் திறக்க மறுத்தால் அந்த ரேழியில் பொதுஜனங்கள் பார்க்கக் கூடிய இடத்தில் எத்தனை நேரம் அனாதையாய் வெட்கம் கெட்டு நிற்க முடியும்?

அவள் சட்டென்று ஒரு தீர்மானத்துக்கு வந்தவளாய் ஒரு காலி ஆட்டோ ரிக்ஷாவை நிறுத்தி ஏறிக் கொண்டாள். ஆஸ்பத்திரிக்குச் சென்று வண்டியை நிற்கச் சொல்லி அவசரமாக ஸ்டாஃப் ரூமுக்குச் சென்றாள்.

இரவுச் சாப்பாட்டைச் சாப்பிட்டு முடித்து, டப்பாவை மூடிக் கொண்டிருந்த ஊர்மிளா ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்தாள்.

''என்ன சாந்தி? நீ இன்னும் வீட்டுக்குப் போகல்லே?''

''அப்புறம் சொல்றேன். ஒரு பத்து ரூபா கைமாத்தாக் குடுக்கிறியா? வெளியிலே ஆட்டோ ரிக்ஷா நிக்கறது. அவனுக்குக் கொடுக்கணும்.''

''தரேன்.''



சாந்தி திரும்பி வருகிற வரையில் ஊர்மிளா காத்திருந்தாள்.

''என்ன சாந்தி? பர்ஸ் தொலைஞ்சு போச்சா?''

களைப்பும் பசியும் துக்கமும் திடீரென்று பொறுக்க முடியாமல் போயிற்று. தேம்பித் தேம்பிக் குலுங்கும் அவள் முதுகை ஊர்மிளா அழுத்திப் பிடித்து உட்கார்த்தி வைத்தாள்.

''என்ன நடந்தது சாந்தி?''

அவள் மெள்ளத் தன்னை நிதானித்துக் கொண்டாள்.

''இன்னிக்கு நான் கிளம்பின பஸ்ஸிலே ஏதோ கலாட்டா. அதனாலே நான் வீட்டுக்குப் போய்ச் சேர றதுக்கு லேட்டாயிடுத்து. நான் வேணும்னே லேட்டா வந்தேன்னு அவருக்குக் கோபம் வந்துடுத்து. வீட்டுக்குள் வராதேன்னு வெளியே வெச்சுக் கதவைச் சாத்திட்டார்.''

''மை காட்! அப்புறம் திறக்கவே இல்லையா?''

''திரும்பத் திரும்ப பெல் அடிச்சேன். திறக்கலே. ஒரு மணி நேரம் அந்த வராந்தாவிலேயே நின்னு பார்த்தேன். அப்புறம் எத்தனை மணி நேரம் அங்கே அனாதை மாதிரி நிக்கறதுன்னு இங்கே வந்தேன்.''

''நல்ல வேலை செஞ்சே. அந்த மாதிரி ஒரு புருஷன் கிட்ட எப்படித்தான் இருக்கே? உனக்கு ரொம்பப் பொறுமை சாந்தி! நானா இருந்தா எப்பவோ உதறிட்டுக் கிளம்பியிருப்பேன்.''

''உதறறது அவ்வளவு சுலபமில்லே ஊர்மி. அதெல்லாம் ஒரு பழக்கம் மாதிரி. லேசிலே விட முடியாத பழக்கம்!''

''நீ சரியான மக்கு! அது உனக்கு நல்லதுக்கில்லேன்னு நீ விடத்தான் வேணும். எத்தனை நாளைக்கு இப்படி மூடின கதவுக்கு வெளியே நிப்பே?''

# அந்தி நேரத்து உதயங்கள்

வாஸந்தி

''அது திறக்கிற வரைக்கும்!''

''நான்ஸென்ஸ். இந்த மாதிரி ஆம்பிளைங்களெல்லாம் மாறவே மாட்டாங்க.''

''ஒரு வேடிக்கை ஊர்மி. அவர் மாறுட்டாலும் நான் நிச்சயமா மாறணும். அவரைத் திருப்திப்படுத்த எல்லா வழியையும் பார்க்கணும்னு இன்னிக்குச் சாயங்காலம் தான் தீவிரமா நினைச்சுண்டு போனேன். அவர் எனக்குச் சான்ஸே குடுக்கல்லே!''

''நீ ஒரு மக்கு!''

''சும்மா அதையே சொல்லாதே. இப்ப சாப்பிட ஏதாவது கிடைக்குமா ஊர்மி?''

''ஓ காட். நீ இன்னும் சாப்பிடல்லே இல்லே? கான்டீன்லே ஏதாவது கிடைக்கும். நான் ஆயா கிட்டச் சொல்லி வரவழைக்கிறேன்.''

''நல்ல வேளை நான் ஆஸ்பத்திரியிலே வேலை பார்க்கறேன் ஊர்மி. ஏதாவது ஆபீஸாயிருந்தா இப்படி ராத்திரி வேளையிலே நுழைய முடியாது.''

''நீ செஞ்சிருக்கிற ஒரே புண்ணியம்!'' விருக்கென்று ஊர்மி வெளியே போனாள். உடம்பின் ஒவ்வொரு அணுவும் வலித்தது. அங்கிருந்த பெஞ்சில் சாந்தி படுத்துக் கொண்டாள்.

சற்று நேரத்தில் ஆயா பின்தொடர ஊர்மி வந்தாள் பூரி ஸப்ஜியுடன்.

''நான் செஞ்ச இன்னொரு புண்ணியம்!''

''நீ சாப்பிட்டுட்டுத் தூங்கு சாந்தி. நான் ட்யூட்டிக்குப் போறேன். அந்த ஆளு, அதான் அந்த கம்ப்ளீட் லோ பாரப்லிஜியா, இன்னிக்கு ஒரே கலாட்டா. ராத்திரி பேசாமல் இருக்கப் போறானோ இல்லே தொந்தரவு கொடுக்கப் போறானோ?''

''ஏன் என்ன விஷயம்?''

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

''ஏம்மா... குழந்தையும் தெய்வமும் ஒண்ணுதானே?''

''ஆமாம். எதுக்குக் கேக்கறே?''

''இல்லே. நீ சாமிக்குப் படைக்க வச்சிருந்த பிரசாதத்தை நான் தின்னுட்டேன், அதுதான்...''

– சி. மோகன்தாஸ்

''அவனுடைய சிநேகிதி வந்திருந்தா. திடீர்னு இந்த ஆளு 'கோ அவே'ன்னு அவளைப் பார்த்து ஒரே கத்தல். அந்தப் பெண் முகத்தைத் தொங்கப் போட்டுண்டு போனா. அந்த ஆளுக்குப் பெரிய மெண்டல் டிப்ரெஷன் பாவம். யாராவது பக்கத்திலேயே உட்கார்ந்துண்டு கையைப் பிடிச்சுண்டு இருக்கணும்னு எதிர்பார்க்கிறான்!''

பூரியைச் சாப்பிட்டு ஒரு டம்ளர் நீரையும் அருந்திய பின் வயிற்றின் பயங்கர ஓலம் தணிந்தது. இப்பொழுது லேசாகப் புன்னகை கூட அரும்பியது. அவள் முகத்தைக் கழுவிக் கொண்டு வந்து படுத்துக் கொண்டாள். உடம்பின் ஒவ்வொரு உறுப்பும் தளர்ந்த அந்த நிலையில் எதைப் பற்றியும் சிந்திக்கவே மனசு சோம்பல் பட்டது. நடராஜனின் கோபத்தையும் நிஷ்டூரப் பார்வையும் அசிங்க வார்த்தைகளும் அறவே நினைவுக்கு வராமல் போனால் எத்தனை நன்றாக இருக்கும்! அவள் கண்களை மூடிக் கொண்டு தூங்க முயன்றாள். உடம்பு கட்டை மாதிரி அசைய மறுத்தாலும் மூளை சுறுசுறுவென்று முன்னும் பின்னுமாகப் பரபரத்துக் கண்களில் நீரை வரவழைத்தது.

''நானாயிருந்தா எப்போதோ உதறிட்டுக் கிளம்பி யிருப்பேன்.''

நம்மால் ஏன் முடியவில்லை? விட்டுக் கொடுக்கும் சுபாவத்தாலா? பலவீனங்கள் இல்லாத மனிதர்கள் இல்லை என்கிற பொதுவான எண்ணத்தாலா? தாம்பத்ய பந்தத்தை அத்தனை சுலபமாக முறிக்கக் கூடாது என்கிற ஆத்மார்த்த எண்ணத்தாலா? ஆனால் இவனது விரட்டல்களை எத்தனை நாளைக்குச் சகித்துக் கொண்டிருக்க முடியும்?

கேள்விகள் நூறாயிரமாகக் கிளம்பி மண்டையைக் குடைந்தன. அவள் புரண்டு புரண்டு படுத்துத் தூக்கம் வராமல் எழுந்தாள். தலையைக் கோதி விட்டுக் கொண்டு அறையை விட்டு வெளியே வந்தாள். வெளி வராந்தாவுக்கு வந்ததும் எங்கோ பெய்த மழையின் கருணையில் குளிர்ந்த காற்று முகத்தில் அடித்தது, காலையில் காய்ந்த உஷ்ணத்தை ஈடு செய்கிற மாதிரி–

ரீஹாபிலிடேஷன் வார்டு அரை குறைத் தூக்கத்தில் இருந்தது. ஊர்மிளா ஒதுக்குப் புறமாக இருந்த மேஜை மேல் முகத்தைக் கவிழ்த்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். தூரத்தில் எங்கோ எரிந்த இருபத்தி ஐந்து வாட் பல்பு வார்டு முழுவதுக்கும் ஒரு மெலிதான வெளிச்சப் போர்வையைப் போர்த்தியிருந்தது.

ஏதோ தூரத்துக் கட்டிலிலிருந்து முனகல் கேட்டது. சுபாவமாக அவளது கால்கள் அதை நோக்கிச் சென்றன. கட்டிலை நெருங்க நெருங்க அது ஹரியின் கட்டில் என்று புரிந்தது. கண்களை மூடிய நிலையில் அவன் முனகிக் கொண்டிருந்தான். அந்தத் தீர்க்கமான மூக்கையும் விசாலமான நெற்றியையும் பார்க்கையில் அவனுடைய பளபளக்கும் கண்ணும் கூர்மையான பேச்சும் நினைவுக்கு வந்தன. இவன் எதற்காக இன்று கத்தியிருப்பான்? அந்த மாயாவிடமிருந்து இவன்

# வருவான் ராஜகுமாரன்!



# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!



**நைஸில்**
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர்.






2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'

**வாங்குவீர் நைஸில்.
விரட்டுவீர்
வியர்க்குருவை.
டால்கம் பவுடரைவிட
குறைந்த விலையில்!**



மருந்துக் கலவை
யுள்ள நைஸில்:

1. அதிக வியர்வை யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற் படுத்தும் கிருமி களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத மளிக்கிறது.

GN-79-PR-TM

ரொம்ப எதிர்பார்க்கிறான். ஸெலுலாய்ட் பொம்மை மாதிரி இருக்கும் மாயா —மற்றவர்களுக்காக எதுவும் கொடுத்துப் பழக்கமில்லாத மாயா மாதிரி லட்சக் கணக்கில் பெண்கள் இருப்பது அவனுக்குத் தெரியாது.

அவள் மெல்ல அவன் நெற்றியில் கை வைத்தாள்.

சட்டென்று கண் விழித்துப் பார்த்தான்.

''வலிக்கிறதா மிஸ்டர் ஹரி?'' என்றாள் தமிழில்.

அவன் வியப்புடன் அவளைப் பார்த்தான்.

''யாரு, சாந்தியா?''

''ஆமாம்.''

''எப்படி ராத்திரியிலே இருக்கீங்க?''

''இன்னிக்கு நைட் டியூட்டியும் பார்க்கிறேன்.''

''வேடிக்கை.நான் தூங்கப் போகும்போது நினைச்சேன். நீங்க இருபத்தி நாலு மணி நேரமும் இங்கே டியூட்டி பார்த்தீங்கன்னு எவ்வளவு நல்லாயிருக்கும்னு!''

சட்டென்று ஒரு பிரவாகம் நெஞ்சில் கிளம்பிற்று. அவளது அருகாமையை வேண்டுபவர்கள் இவர்களாவது இருக்கிறார்களே!

''ஏன் ஹரி?''

''நீங்கதான் இதமா இருக்கீங்க!''

''தாங்க்யூ. இப்ப வலி இருக்கா?''

''நிறைய — முதுகு, கை, கழுத்தெல்லாம் வலிக்கிறது. தலையும் வலிக்கிறது.''

''வலிக்கு மாத்திரை தரேன்.''

''நல்ல வேளை என் கால்கள் எங்கே இருக்குன்னு தெரியலை.''

அவள் குழப்பத்துடன், ''ஏன்?'' என்றாள்.

''தெரிஞ்சா அதுவும் வலிச்சிருக்கும்.''

அவளுக்குப் பாவமாக இருந்தது. சுபாவத்தில் இவன் ரொம்ப உற்சாகமுள்ளவனாக இருக்க வேண்டும். பழைய மனநிலைக்கு எப்போது திரும்பப் போகிறான்?

''மூளை வேலை செய்யறதினாலேதான் வலின்னு ஒண்ணு இருக்கிறது தெரியறது. அதனாலே மூளையே வேண்டாம்னு சொல்லிடுவீங்களா?''

அவன் மௌனமாக அவள் கொடுத்த மாத்திரையைச் சாப்பிட்டான்.

பிறகு மெள்ளச் சொன்னான்.

''என்னுடைய நிலையிலே மூளை கலங்கிப் போறது ரொம்பச் சுலபம் சாந்தி. மூளை வேண்டாம்னு நான் சொல்லாமலே அது நழுவிப் போயிடும்.''

அவள் சிரித்தாள்.

''மூளை இருக்கோ இல்லையோ அசட்டுத்தனம் நிறைய இருக்கு. உங்களை விட மோசமான கேஸை நான் பார்த்திருக்கேன். சிரிச்சுக்கிட்டுத் தாங்கிக்கிட்டிருக்கிறதை நான் பார்த்திருக்கேன்.''

''அவங்க உங்களுக்கு உறவாயிருக்கும்!''

அவள் மறுபடியும் சிரித்தாள்.

தங்கள் பேச்சு மற்ற நோயாளிகளுக்குத் தொந்தரவாக இருக்குமோ என்று நினைத்தபடி அவள் மெள்ளச் சொன்னாள்.

''காலையிலே பேசிக்கலாம் — தூங்குங்க.''

''சாந்தி,சாயங்காலம்மாயாவந்திருந்தா''

''வெரி குட்.''




''தூங்குகிறவனை எழுப்பலாம். தூங்குகிறதாகப் பாசாங்கு பண்ணுகிறவனை என்ன செய்ய முடியும்?''

''எழுப்புகிறதாகப் பாசாங்கு பண்ணலாமே!'' — பெ. கலாசாமி

---

''குட் இல்லே. அவ மனசு ரொம்பக் கலங்கிப் போயிருக்காம். மாறுதலுக்கு மெட்ராஸுக்குப் போகப் போறாளாம்.''

சாந்தி பதிலேதும் சொல்லாமல் அவனைப் பார்த்தாள். இவனுக்கு இந்த மாதிரி அதிர்ச்சிகள் எல்லாம் தாங்க எப்பொழுது தெம்பு வரும்? இன்னும் பல அதிர்ச்சிகளையும் இவன் தாங்க வேண்டி வரும்....

''அவங்க போயிட்டு வரட்டும் ஹரி. உங்களைக் கவனிச்சுக்க நாங்கள்ளாம் இல்லே?''

அவன் சட்டென்று அவளுடைய கையைப் பற்றினான்.

''நீங்க இந்த மாதிரிச் செஞ்சிருப்பீங்களா?''

''எந்த மாதிரி?''

''இன்னும் ரெண்டு மாசத்திலே கல்யாணம் பண்ணிக்கப் போறோம்னு நினைச்சிருந்த ஆள் குத்துயிராக் கிடக்கும்போது வேறே ஊருக்குப் போயிடுவீங்களா?''

அவள் திகைத்தாள். ஓ. இவனுக்கு எத்தனை ஆழமான பிரியம் அந்தப் பெண் மேல்! அதனால்தான் இத்தனை ஏமாற்றம், இத்தனை துக்கம்.

அவள் மெல்லப் புன்னகைத்தாள்.

''இது ஒரு அசட்டுத்தனமான கேள்வி ஹரி. எனக்கு அந்த மாதிரி ஒரு நிலைமை ஏற்பட்டதில்லே. நீங்க குத்துயிரா இல்லவும் இல்லே. இப்போதைக்கு நான் எந்த ஊருக்கும் போறதா இல்லே.உங்களைக் கவனிச்சுக்க நான் இருப்பேன்.''

''ரொம்ப தாங்க்ஸ் சாந்தி. அப்ப என் கர்ல் ஃப்ரெண்டா நீங்க இருக்கீங்களா? ஆனா வெறும் வாயாலேதான் நான் காதல் செய்ய முடியும்!''

அவள் ஒரு வினாடி தூக்கி வாரிப் போட்டு அவனைப் பார்த்தாள், அந்த மங்கிய வெளிச்சத்தில் அவன் கண்களில் தெரிந்த சிறு பிள்ளைத் தனத்தைப் பார்த்து.

''ஓ.கே!'' என்று சிரித்தாள்.

(தொடரும்)

## போட்டிக் கதை-2

# பிரம்மோபதேசம்



குப்பண்ணா வெளியிலிருந்து களைத்துவந்த போது வாசல் திண்ணையில் ஒரு சிறுவன் முடங்கியபடி படுத்து உறங்கிக் கொண்டிருப் பதைப் பார்த்தார்! யாரிவன் புதியவன்?

''பாக்கியம்..., பாக்கியம்...'' என்றார் குப்பண்ணா.

குப்பண்ணா கேட்க ஆரம்பிப்பதற்குள் பாக் கியமே ஆரம்பித்து விட்டாள்.

''பையன் யாருன்னு பாக்கறேளா? பக் கத்து ஊராம். பசியிலே மயங்கி விழறுப் பலே ஆயிட்டான். ஏதோ ஸ்லோகம் சொல்லிண்டு பிச்சை எடுத்துண்டு வந் தான். நம்ம வீட்டு வாசல்லே மயங்கி விழ இருந்தவனுக்கு நான்தான், இருந்த சாப்பாட்டிலே கொஞ்சம் கொடுத் தேன். சாப்பிட்ட பிறகு அப்படியே தூங்கிப் போயிடுத்து பாவம்...''

இப்போது குப்பண்ணாவுக்கு மயக் கம் வந்தது.

பாக்கியமாவது, இரக்கப்பட்டாளா வது... சோறு போட்டாளாவது?

இப்படி இருந்தால் உலகம் என்னா வது?

குப்பண்ணாவுக்கு ஏதோ 'ரோஜ்' உத்தி யோகம். காலையில் எழுந்து துண்டை உதறிப் போட்டுக் கொண்டு கிளம்பினால்—

வேலை கிடைத்தால் உண்டு, இல்லை யென்றால் இல்லை.

''அண்ணா... அண்ணா'' என்று அத்தனை பேரையும் காக்காய் பிடித் துத்தான் வைத்திருந்தார். ஆனாலும் தினமும் வேலை நிச்சயம் என்று சொல் வதற்கில்லை.

கிருஷ்ண வாத் யார் க்ரூப், ராமு வாத்யார் க்ரூப் என்று எத்தனை க்ரூப்கள்! இந்த க்ரூப்பில் இருந்தால் அந்த க்ரூப்கார னுக்குப் பிடிக்காது. அதில் இருந்தால் இவனுக்கு ஆகாது. சம் பளம் தருகிறவன் எந்த க்ரூப்பாக இருந்தால் என்ன? ஏன் இவர்கள் இப்படி முத்திரை குத்து கிறார்கள்? என்று குப்பண்ணா நினைப்பார்!

நினைத்து என்ன பயன்? இவருடைய தொழில் ஏதோ ஒரு க்ரூப்பைச் சார்ந்து தான் இருக்க வேண்டும். இருந்தார். சில சமயம் வரும்படியே இருக்காது. கல்யாண மாதமானால் ஓரளவு வருமானம் இருக்கும். தீபாவளி சமயத்தில் இவர் தனியாக நாலு வீடுகளில் ஜிலேபி சுற்றுவதும், மிக்சர் போடுவதுமாக என்னவோ சம்பாதித்துக் காலம் தள்ளி வந்தார்; கல்யாணச் சமை யலில் கிடைக்கிற வரும்படியில் அவனுக்கு இவனுக்கு என்று கமிஷன் போக இவருக்குத் தேறுவது மிகச் சொற்பமே. அந்தச் சொற் பத்திலும், அற்பத்திலும் வாழ்கிற இவரின் மனைவி இவருக்குப் பாதி நாட்கள் வீட்டில் சாப்பாடு இல்லை என்கிற நிம்மதியில் ஒரு சோற்றை வடித்து, அப்பளம் சுட்டு அல் லது கீரையை மசித்து, குட்ரசம் வைப் பாள். பாதி நாள் சமையலே கிடையாது. பழையதுதான்!

இதில் புதிதாக வந்த இந்தப் பிள்ளை யாண்டானுக்குப் பங்கா? ஆச்சரியம்தான்! திடீரென்று எங்கிருந்தோ வந்த பிள்ளைக்கு அவள் உணவையும் போட்டு இடமும் கொடுப்பதென்றால்...?

எங்கிருந்தோ வந்தவன்....?

இவன் என்ன பாரதி கண்ட கண்ணனா என்ன?

''கண்ணன்தான்! ஆமான்னா... அந்தப் புள்ளை பெயர் கண்ணன்தான். பக்கத்துக் கிராமத்துலே அவன் அப்பா சாஸ்திரிகளாம். இவன் மூத்தா பிள்ளையாம். இளையா மோகத்திலே இவனை இளையாளோட சேர்ந்து அப்பனும் கொடுமை பண்ணினானாம், அதான் பையன் பாவம், ஓடிவந்துட்டான். நம்ம வீட்டிலே இருக்கட்டும்னு விட்டுட்டேன்!''

குப்பண்ணா பேசவில்லை. பையன் வந்து இரண்டு நாட்கள் ஆகிவிட்டது. இன்னும் மர்மம் விடுபடவில்லை.

அன்று—

''கிளம்புங்கோ... கிளம்புங்கோ... சீக்கிரம் கிளம்புங்கோ....''

பாக்கியம் பரபரத்தாள்.

கண்ணன் குளித்துவிட்டு அழகாக நெற்றி நிறைய விபூதியுடன், இருக்கும் ஒரே உடையைத் தோய்த்து, உலர்த்தி, அதையே சுத்தமாக அணிந்து கொண்டு வாசலில் நின்றபடி என்னவோ வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

''எங்கே கிளம்பணும்கிறே?''

''நம்ம கண்ணனுக்கு பாவம் பூணூல் போட்டு வைக்கலாமோன்னு பாக்கறேன்.''

குப்பண்ணாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. திடீரென்று பாக்கியம் கருணை வள்ளலாக, புத்தரின் மறு அவதாரமாக மாறி, இரக்க மனம் படைத்த அருள் ஜோதியாக எப்போது மாறினாள்?

திடீரென்று ஒன்று உறைத்தது. ஒரு கல்யாண வீட்டில் நடந்த சம்பாஷணை!

''ஒய் தெரியுமா? பிராமணர்கள் அஸோஸியேஷன்லே ஏழைக் குழந்தைகளுக்கு இலவச பூணூல் போடறாளாம். அது மட்டுமில்லே. அந்தக் குழந்தையோட அப்பா அம்மாவுக்கு நல்ல வேஷ்டி, நல்ல புடவை, பையனுக்குப் பஞ்சாத்திர உத்தரிணி, தாம்பாளம் எல்லாம் தராளாம். பூணூல் அன்னிக்குப் பையனைச் சேர்ந்த அஞ்சு பேருக்கு இலவச விருந்துச் சாப்பாடாம்...''

''ஆமாம், இதெல்லாம் பண்றது சரிதான். புடவைக்காகவும், வேஷ்டிக்காகவும் வருஷா வருஷம் அவாளே போய்த் திரும்பத் திரும்பப் புடவையை வாங்கிண்டா? அதை எப்படிக் கண்டு பிடிப்பா?''

''அத்தனை கூட யோசிக்காமலா இந்தக் காரியம் பண்ணுவா? பூணூல் போடறதுக்கு முன்னால், அப்பா, அம்மா பேர், அவா போட்டோ, பையனோட போட்டோ இதை எல்லாம் கொண்டு போய்ப் பதிவு பண்ணணுமாம். ஒரு இண்டர்வ்யூ கூட இருக்காம். அதெல்லாம் ஏமாத்தமுடியாது.''

''எனக்குப் பிள்ளை இல்லியேன்னு இருக்கு. ஒரு வேஷ்டியும் புடவையும் கிடைக்குமே!''

''என்ன பேக் மாதிரி நிக்கறேள்? கிளம்புங்கோ.''

'ப்ளாஷ் பேக்'கிலிருந்து திரும்பிய குப்பண்ணா உண்மையில் 'பேக்' மாதிரித்தான் நின்று கொண்டிருந்தார்.

''இன்னிக்குக் கண்ணன் பேரைப் பதிவு பண்ணப் போகணும். அடுத்த வாரம் ராமர் கோயில்லே பூணூல் கல்யாணம். நாம தான் அவனோட அம்மா, அப்பா!''

அவர் நினைத்தது சரிதான்.... நண்பர்கள் சொன்னது சரிதான். அவர்கள் புகைப் படம் கேட்டது சரி... அவர்களை ஏமாற்ற முடியாது என்பதும் சரி... ஆனால் பாக்கியத்திடம் அவர்கள் பையனின் பெர்த் சர்டிபிகேட் அல்லவா கேட்டிருக்க வேண்டும்? எத்தனை சாமர்த்தியசாலி இவள்! இல்லாத குழந்தைக்குத் தாயானாளே! ஒரு நொடிப் பொழுதில், பத்து மாதம் சுமக்காமல், பிரசவ வலி எடுக்காமல், ஆஸ்பத்திரி செலவு இல்லாமல், மருந்து சாப்பிடாமல், பத்தியம் சாப்பிடாமல் அம்மாவாகப் பாக்கியம் மாறிப்

**விமலா ரமணி**



போறுனே? இந்தச் சாமர்த்தியம் யாருக்கு வரும்? வேண்டாம் பாக்கியம்... ஒரு புடவைக்காகவும், வேஷ்டிக்காகவும் பையனுடைய பிறப்பையே மாற்ற வேண்டுமா? இது தப்பு... வேண்டாம்...!

ஆனால் குப்பண்ணாவுக்குப் பாக்கியத்தை எதிர்த்துப் பேசிப் பழக்கமில்லை. அவள் சொல்வதையெல்லாம் ஏற்றுத்தான் பழக்கம்! அப்படியே இவர் எதிர்த்துச் சொன்னாலும் அவள் என்ன சொல்லுவாள் என்பதும் அவர் மனத்துள் புரிந்தது.

''ஆமா... இதுலே ஒண்ணும் குறைச்சல் இல்லே. ஒரு புடவை வாங்கித் தரத் துப்பில்லாட்டாலும் வர வரும்படியையும் தடுப்பேள்.... நான் பண்ணின பாவம். ஜென்மாந்திரக் கடன். இன்னும் எத்தனை நாளைக்கு இப்படிச் சீரழியணுமோ?'' —இத்யாதி... இத்யாதி....

''நீங்க பேசாம வாங்கோ... நான் எல்லாம் பார்த்துக்கறேன். கண்ணன் கிட்டே கூடச் சொல்லியிருக்கேன் விவரமா... அவனோட அம்மா அப்பா நாமதான். இத்தனை நாளா அவன் தன்னோட அத்தை ஆத்துலே. அதாவது உங்களோட தங்கை ஆத்துலே இருந்து படிச்சுண்டு இருந்தான். இப்பத்தான் ஊரிலே இருந்து வந்திருக்கான்! என்ன புரியுதா?''

''எனக்குத் தங்கையே இல்லையே பாக்கியம்....''

''இதெல்லாம் சும்மா ஒரு பேச்சு. ஆயிரம் பொய்சொல்லி ஒரு கல்யாணம் பண்ணும்பா. பூணூல் கல்யாணமும் அப்படித்தான். நாம என்ன ஒருத்தரைக் கெடுக்கவா பொய் சொல்றோம்? நல்லதுக்குத்தானே?''

---

“ஊனமுற்றோரை ஆதரிக்கணும்னு உங்க பத்திரிகையில் பக்கம் பக்கமா எழுதிறீங்க... இப்ப இதுமாதிரி செஞ்சிருக்கீங்களே, நியாயமா?”

“என்ன செஞ்சிட்டோம்?”

“'நடை' சரியில்லேன்னு குறை சொல்லி என் கதையைத் திருப்பி அனுப்பிச்சிருக்கீங்களே!”

- கிரிஜா மணாளன்




---

''ஆயிரம் பொய் சொல்லலாம். நல்லதுக்காக ஆனால் தன்னலத்துக்காக இப்படி அபத்தமான பொய் சொல்லி... அதுவும் ஒரு புடவை வேஷ்டிக்காக...''

குப்பண்ணா முடிக்கவில்லை.

பாக்கியம் பொரும ஆரம்பித்துவிட்டாள்.

''தெரியுமே... நேக்கு நன்னாத் தெரியுமே! எனக்கு ஒரு புடவை கிடைக்கப் போறதுன்னு... நான் இத்தனை பண்றேன்? நல்லது பண்ணினாக்கூட அதுலே குத்தம் கண்டு பிடிக்கறேளே!''

''சரி... சரி... கிளம்பு!''

குப்பண்ணா கிளம்பிவிட்டார்.

பையனுக்கு நன்றாகத்தான் டிரெயினிங் கொடுத்திருந்தாள் பாக்கியம். ''அப்பா... அம்மா'' என்று பையன் அவர்கள் எதிரில் குழையோ குழை என்று குழைந்தான்!

பெயர் பதிவு... புகைப்பட பரிமாற்றங்கள்...இண்டர்வ்யூஎல்லாம் ஆகிவிட்டன.

பூணூல் அன்று சடங்குகளுக்கான வழக்கமான மந்திரங்களைச் சொல்லச்சொல்லக் குப்பண்ணாவுக்குத் தொண்டை அடைத்தது.

நான் பாவம் பண்ணுகிறேன். பொய் சொல்லுகிறேன். காயத்ரி, சாவித்திரி என்று அத்தனை அதி தேவதைகளையும் அழைத்து, 'இவன் என் மகன், இவன் என் மகன்' என்று பொய் சொல்கிறேன்.

அந்தப் பெரிய பிரவசன மண்டபத்தில் எட்டு இலவசப் பூணூல்கள் நடந்து கொண்டிருக்கின்றன.

அத்தனை பேரும் அப்பா — பிள்ளைகள்! அவர் மட்டும் போலி அப்பா! பட்டால் துணியைப் போர்த்திக் கொண்டு கண்ணனுக்கு மந்திர உபதேசம் செய்யும்போது, காயத்ரி மந்திரத்தைக் காதில் சொல்லிப் பிரும்மோபதேசம்' செய்து வைத்தபோது, எல்லோரும் மேளக்காரரைப் பார்த்து ஆள் காட்டிக் காட்டிப் பயமுறுத்த, அவர் பயந்துபோய் வாசித்த கெட்டி மேளத்தின் ஒலி காதில் விழுந்தபோது, சுற்றி இருந்தவர்கள் அக்ஷதையும், புஷ்பமுமாக வாரி இறைத்து ஆசீர்வதித்தபோது குப்பண்ணாவுக்கு அழுகை வந்தது.

'படுபாவி... என்னை இந்த ஆன்மீக சதஸில் பொய்யனாக நடிக்க வைத்து விட்டாளே சண்டாளி! இதை எதிர்க்கத் தெரியாத மூடமாக இருக்கிறேனே நான்!'

அவர் தமக்குத் தாமே பிரும்மோபதேசம் செய்து கொண்டிருந்தார்.

வயிறு நிறையச் சாப்பிட்டு விட்டுப் புதுப் புடவை, பஞ்சாத்திரம், உத்திரணி, தாம்பாளம் சகிதம் மலர்ச்சி பொங்கப் பாக்கியம் வீட்டில் நுழைந்தாள். குட்டி வேஷ்டியைக் கட்டிக் கொண்டு கண்ணன் அபிவாதயே சொன்னபோது குப்பண்ணாவுக்கு அழுகை வந்தது. அவன் யாரோ? இவர் யாரோ? அவனையும் தன் குலமாக்கி,.., கோத்திரமாக்கி,..,

ஒரு வாரம் வரை கண்ணன் தினமும் கோவில் மண்டபத்துக்குப் போய்ச் சந்தியா வந்தனப் பாடங்களைக் கற்றுக் கொள்ள

# வாங்குவீர் இப்போது! மிச்சப்படுத்துவீர் மிகுதியாய்!

## மிச்சப்படுத்துவீர் ரூ.2

காட்பரிஸ்

## போர்ன்விடா

500 கி. ரீஃபில் பேக் வாங்கும்போது.




அதே நலன், அதே புத்துணர்ச்சி, அதே ருசி. ரீஃபில் பேக், போர்ன்விடாவின் புதுமையும் நறுமணமும் சற்றும் குன்றாமலிருப்பதற்கென்றே விசேடமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. அதைத் திறந்தவுடன் காலி போர்ன்விடா டின்னில் கொட்டி வைக்கவும்—அதன் இயற்கை குண நலன்களைக் காத்திட.

இன்சுவை மிக்க போர்ன்விடா வழங்குவீர், உங்கள் குடும்பத்தினருக்கு. முந்துங்கள். 500 கி. ரீஃபில் பேக் வாங்குவீர். விசேடமான மிச்சம் உங்களுக்கு. பருகி மகிழ்வீர் போர்ன்விடா.

முந்துங்கள்! சரக்குகள் அதிகமில்லை.

காட்பரிஸ்

## போர்ன்விடா

அளிப்பது அத்தனையும் நலம்...

OBM/7043/TM

# ஜலதோஷமும் ஃப்ளூவும்— சில முக்கிய தகவல்களும் முறியடிக்கும் முறைகளும்

"ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவின் துன்பங்களிலிருந்து விரைவில் நிவாரணம் பெற அனாஸின் பெரிதும் உதவுகிறது" என்கிறார் நர்ஸ் நாட்டாலியா டிசௌஸா.



**ஜலதோஷமும் ஃப்ளூவும் வரக் காரணம் என்ன?**
பாதிக்கப்பட்டவர்களிடமிருந்து காற்றில் வரும் விஷ அணுக்கள் ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் பரப்புகின்றன. இந்த விஷ அணுக்களை சாதாரணமாக உடல் எதிர்க்கிறது. ஆனால் அளவுக்கு மீறிய உழைப்போ, சத்துக்குறைவோ உடலைப் பலவீனப் படுத்தி, நோய் எதிர்ப் பாற்றலைக் குறைக்கிறது.

**அறிகுறிகள் யாவை?**
உடல் வலி, தலைகனம், தும்மல், மூக்கிலே ஒழுக்கு இவற்றுடன் ஜலதோஷம் தொடங்கும். குளிர், அமைதியின்மை, வியர்வை தோன்றும். இருமல், தொண்டைப் புண், பசியின்மை, உடல் சோர்வு தொடரலாம்.

**சிக்கல்கள் தோன்றுமா?**
புறக்கணித்தால் நிமோனியாவிலும், சுவாசகோசம் மற்றும் மேல் மூச்சுக் குழாயின் நோய்த் தொற்றிலும் முடியலாம்.

**அனாஸின் எப்படி உதவுகிறது?**
இது ஜலதோஷம், ஃப்ளூவினால் ஏற்படும் வேதனையைப் போக்குகிறது. உலகெங்கும் டாக டர்கள் சிபாரிசு செய்யும் வலி-நிவாரணியை அதிக அளவில் கொண்ட அனாஸின் சக்தி வாய்ந்தது. டாக்டரின் நம்பகமான மருந்துக் கலவை போன்றது. ஜலதோஷம் ஃப்ளூவின் முதல் அறிகுறி தோன்றியதுமே, அனாஸின் சாப்பிடுங்கள். ஒரு நாளைக்கு 4 தடவை.

**நீங்கள் வேறென்ன செய்யவேண்டும்?**

- நிறைய திரவ பதார்த்தங்கள், கொதிக்க வைத்த நீர், ஆரஞ்சு அல்லது எலுமிச்சை சாறு பருகுங்கள்.
- சத்துணவு புசியுங்கள்.
- போதிய ஓய்வெடுங்கள்.
- ஆன்டிசெப்டிக் மருந்து அல்லது உப்புக் கரைத்த நீரால் கொப்புளியுங்கள்.
- அறைகள் காற்றோட்டமாக இருக்கட்டும்.



சக்தி வாய்ந்த, நம்பகமான
மேனர்ஸ்
அனாஸின்*

இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி

அளிப்பவர்கள்: ஜெஃப்ரி மேனர்ஸின் அனாஸின் பிரிவினர்.

* Regd. TM

A24-6/79

வேண்டுமாம். கண்ணன் போய்க்கொண்டிருந்தான்.

நாளையோடு கண்ணனுக்குப் பாடம் முடிகிறது.

கண்ணன் கோயிலுக்குப் போயிருந்த அந்த மாலை நேரத்தில் பாக்கியம் குப்பண்ணா அருகில் வந்தாள்.

''என்ன?''

''நாளைக்குக் கண்ணனை ஆத்தை விட்டு அனுப்பிடலாம்னு இருக்கேன்...''

திடுக்கிட்டுப் போனார் குப்பண்ணா. சண்டாளி... தனக்குப் புடவை கிடைத்தவுடன் அவனை துரத்தப் போகிறாளா? இது அடுக்குமா?

ஆனாலும் குப்பண்ணாவால் எதிர்க்க முடியவில்லை. முடியாது.

''ஏன் திடுதிப்புன்னு இப்படிச் சொல்றே?''

''பின்னே என்ன? விக்கிற விலைவாசியிலே இவனுக்கு வேறே தண்டச் சோறு போட முடியுமா என்ன? ஏதோ பூணூல் போட்டோம். நம்மால ஆனது. அவன் பொழைச்சுப்பான். எதுக்கும் உங்ககிட்ட விவரம் சொன்னேன்... அவ்வளவுதான்... நான் போறேன்... வாசல் கதவைத் தாழ் போட்டுக்கோங்கோ!''

பாக்கியம் அக்கம் பக்கம் அரட்டை அடிக்கக் கிளம்பிவிட்டாள்.

ஆமாம்... பாக்கியம் தர்ம பத்தினி. எதைச் செய்வதானாலும், சொல்வதானாலும் குத்துப் பிள்ளையார் மாதிரி இருக்கும் குப்பண்ணாவிடம் சொல்லிவிட்டுத்தான் செய்வாள்! பிள்ளையார் பதில் பேசப் போகிறாரா என்ன?

வாசல் திண்ணையைப் பார்த்தார் குப்பண்ணா. நாளை இந்தத் திண்ணை நிரந்தரமாக வெறிச்சோடிக் கிடக்கப் போகிறது.

மூன்று குடித்தனக்காரர்களுக்குப் பொதுவான அந்தத் திண்ணையின் அந்த மூலை தான் கண்ணனுக்குச் சொந்தம். எப்போதும் அங்கு உட்கார்ந்து கொண்டுதான் எதையாவது படித்துக் கொண்டு, அல்லது எழுதிக் கொண்டிருப்பான். இனி... இனி.. அந்த இடம் நிரந்தரக் காலி! வாசல் கதவைத் தாழிட்டார். உள்ளே வந்தார்.

''கதவைத் திறந்து விடுங்கோ அப்பா... நான் கண்ணன் வந்திருக்கேன். உள்ளே வரணும்.'' பளீரென்று உறைத்தது ஒன்று! நான் தனியானவன் இல்லை... எனக்கொரு—வாரிசு உருவாகி விட்டது. என்னால் முடியாததை இவன் மூலம் நான் சாதிக்க முடியும். ஏனெனில் அவனுக்கு நான் அப்பன்! பிரும்மோபதேசம் செய்வித்த அப்பன்!

''கண்ணா... நான் ஒண்ணு சொல்லப் போறேன்... கவனமாக் கேள்... மாமி... அதான் உன்னோட அம்மா.. உன்னை இந்த வீட்டிலே இருந்து துரத்த முடிவு பண்ணிட்டா. நாளைக்கு உன்னை வெளியே போன்னு சொல்லுவா. நீ உடனே சரின்னு போயிடாதே. எனக்கு யாருமில்லை... நான் மாட்டேன்னு சொல்லு. அவ பிடிவாதம் பிடிச்சா நீ சொல்லு — அத்தனை பெரிய சதஸ்-லே அத்தனை பேர் எதிரிலேயும் உங்க ரெண்டு பேரையும் நான் அப்பா அம்மான்னு சொல்லி மனப்பூர்வமா அப்படியே ஏத்துண்டு இருக்கேன். என்னை வெளியே போன்னு நான் எங்கே போவேன்? — அப்படீன்னு கேளு. அதையும் மீறி அவ மிரட்டினா நீ பயந்துடாதே... நானும் இப்பவே போய் அந்தப் பிராமணர்கள் சங்கத்துலே உண்மையைச் சொல்றேன்னு சொல்லிட்டுக் கிளம்பு... மாமி அடங்கிடுவா.''

குப்பண்ணா மெல்ல மெல்ல விவரித்துக் கொண்டே போகிறார்.

குருக்ஷேத்திரப் போர்க் களத்தில் பார்த்தனுக்கு உபதேசித்த கண்ணபிரானாகத் தம்மைப் பாவித்துக் கொண்டு, இந்தச் சின்னக் கண்ணனுக்கு இவர் உபதேசம் பண்ணுகிறார்.

பழைய தலைமுறையால் காட்ட முடியாத எதிர்ப்புக்களை இந்த இளம் தலைமுறைகள் தான் செய்ய வேண்டும் என்கிற புதிய ஞானத்தைப் பெற்றவராய், தாம் பெற்ற ஞானத்தைக் கண்ணனுக்கும்ஊட்டிக் கொண்டிருக்கிறார்!

அன்று அத்தனை பெரிய சபையில் கண்ணனுக்குப் பிரும்மோபதேசம் செய்தபோது கூசிக் குறுகிய குப்பண்ணா, இன்று நெஞ்சு நிமிர்ந்து — நிஜமாகவே ஒரு பிரும்மோபதேசம் செய்கிற மகிழ்வில் கண்ணனின் காதுகளில் மெல்ல மெல்லத் தம் திட்டங்களைக் கிசுகிசுத்துக் கொண்டிருக்கிறார்!

இதன் முடிவு என்ன என்பது பாக்கியம் வந்தால்தான் தெரியும்!

---



''என் பொண்ணுக்கு ஜாஸ்தி செல்லம் கொடுத்து வளர்த்தது தப்பாப் போச்சு!''
''ஏன்...?''
'''கேட்டரிங் டெக்' படித்த மாப்பிள்ளையைத்தான் கல்யாணம் பண்ணிப்பேங்கிறா...''
- சி. மோகன்தாஸ்

---

# ஏதாவதொரு மிக்ஸரை வாங்கிவிடாதீர்கள்...




## ... உங்கள் தேவைக் கேற்றது ஸுமீத்

அற்புதமான ஸுமீத்! இதன் வகையில் இந்தியாவிலேயே முதலாவது. நாடெங்கிலும் மேன்மேலும் அதிக இல்லத்தரசிகளுக்கு வியப்பூட்டி வருகிறது.

ஸுமீத்தில் மட்டுமே, எல்லா வேலைகளுக்கும் பயனுறும், விசேஷமாக வடிவமைக்கப்பட்ட, பல-பயனுள்ள ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜாடி. அதன்மீது உள்ளே பார்க்கக் கூடிய அக்ரிலிக் மூடி. எனவே ஸுமீத் இயங்குவதைக் கண்ணெதிரில் காணலாம்.

பல்வேறு வேலைகளை விரைவிலும் எளிதிலும் செய்து முடிக்க, இப்போது இதில் 4 அலகு அமைப்பு பாகங்கள்:

ஈரப் பண்ட அரைவைக்காக.
உலர் பண்ட அரைவைக்காக.
கடைய, கலக்க, சாறு பிழிய.
மாமிசத்தை அரிக்க,
காய்கறிகளை நறுக்க.

இவை தவிர, சப்பாத்தி, பூரி மற்றும் அப்பளத்துக்காக மாவை விழுதுபோல் பிசைய விசேஷ இணைப்புப் பாகம். அத்தோடு கேக் மாவை நன்றாகக் கலவை செய்ய விசேஷ 'ஹுக்'...

இவை மட்டுமா? ஸுமீத்தில் 30 நிமிடங்கள் வரை நிற்காமல் ஓடக்கூடிய ஹெவி ட்யூட்டி மோட்டார்.

அற்புதமான ஸுமீத் ஒன்றுதான் முழுமையான கிட்சன் மெஷின். இதை அடைய எத்தனை நாள் வேண்டுமானாலும் காக்கலாம்.



ஈர அரைவை—வடை, இட்லி, தோசைக்காக உளுத்தம் பருப்பு மற்றும் அரிசியை அரைக்க—3½ நிமிடங்களில்.



உலர் அரைவைக்காக—எல்லா வித மசாலாக்கள்—மிளகாய் வற்றல், மிளகு, மஞ்சள், கொத்துமல்லி விதை ஆகியவற்றை அரைக்க.





பொடிக்க—1 நிமிடத்தில் மாமிசத்தைப் பொடிக்க. காரெட், வெங்காயம், தேங்காய், மற்றும் கொட்டைகளை நறுக்க—விநாடிகளில்.



அரைக்க—2 நிமிடங்களில் தேங்காய் சட்னி அரைக்கலாம். அல்லது விநாடிகளில் கொத்துமல்லி சட்னி அரைக்கலாம்.





கடைய—லஸ்ஸி/மில்க் ஷேக் ஆகியவற்றை ஒரே நிமிடத்தில் தயாரிக்க அல்லது நிமிடங்களில் மயோனைஸ் தயாரிக்க, வீட்டிலேயே வெண்ணெ கடையலாம்.



மாவு பிசைய—சப்பாத்தி, பூரி, ஆகியன தயாரிக்க 2 நிமிடங்களில் மாவு பிசையலாம். கேக் மாவை மிகவும் சன்னமாகப் பிசையலாம்—3½ நிமிடங்களில்.



# ஸுமீத்®

## இது ஒன்றே முழுமையான கிட்சன் மெஷின்

இது தவிர கிடைக்கிறது ஸுமீத் டொமஸ்டிக் (பிசையும் இணைப்பு இல்லாமல் கிடைக்கிறது. அதை தனியாகவும் வாங்கிக் கொள்ளலாம்.)

அற்புதமான ஸுமீத் பரவலாகப் பல்வேறு பணிகளைச் செய்கிறது—மற்ற எல்லா வீட்டுப்பயோக மிக்ஸர்களை விடச் சிறப்பாக.

எப்போது நாங்கள் இலவசமாக இயக்கிக் காட்டுகிறோம் என்பதைக் கவனித்து வாருங்கள். உங்களுக்கெனவே ஸுமீத் சிறப்பாக இயங்குவதைக் காணுங்கள்!

தயாரிப்பாளர்கள் : பவர் கண்ட்ரோல் அண்ட் அப்ளையன்ஸஸ் கம்பெனி,
F/11 இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை 600 058, இந்தியா
போன் : 633 340
வெளிநாட்டு அங்கீகரிக்கப்பட்ட விற்பனையாளர்கள் :
மெஸர்ஸ் எலெட் ரேடியோ அண்ட் எஞ்ஜினியரிங் கம்பெனி லிமிடெட்,
26, கெய்ஸர் ஸ்ட்ரீட், கொழும்பு, ஸ்ரீலங்கா, போன் : 29744
மெஸர்ஸ் டொமஸ்டிக் அப்ளையன்ஸஸ் இன்டர்நேஷனல், ஸுமீத் அப்ளையன்ஸ் சென்டர், 401, டான்ஃபோர்ட் அவின்யூ யூனிட் நெ. 14, டோரொண்டோ,
ஒன்டாரியோ, கெனடா M4J-3S2, போன் : (416) 421-2997.
பவர் கண்ட்ரோல் அண்ட் அப்ளையன்ஸஸ் (மலேசியா) Sdn, bhd., 5எ, ஜாலன் 8/1டி,
ஜாலன் கல்தான், பெட்டலிங் ஜெயா, மலேசியா; போன்: 561347/561549
பெகாஸஸ் பிரைவேட் லிமிடெட், 528, ஆர்ச்சர்ட் டவர்ஸ், 400, ஆர்ச்சர்ட் ரோட்,
சிங்கப்பூர் 9. போன்: 2351146

OBM/5628 R /1 TM



ஒரு பக்கம் அபரிமிதவரிகள், இன்னொரு பக்கம் ஏகப்பட்ட கண்ட்ரோல்கள் இரண்டுக்கும் மத்தியிலே மாட்டிக்கிட்டுத் தவிக்கிற இந்தியப் பொருளாதாரம் மாதிரி....

# போட்டோ கார்ட்டூன்!



ஹய்யா !
எம். ஜி. ஆர்
ஆட்சியிலே
தண்ணி
ஆரு ஓடுது!

கள்ள மார்க்கெட்டும் கறுப்புப் பணமும் மாதிரி நாம இணை பிரியாம வாழ்வோம், டார்லிங்!





வெட்கப்படற மாதிரி அப்படி ஒண்ணும் நீ பருத்துடலியே! பணவீக்கத்தையே சுமந்துக்கிட்டு நிக்கிற இந்தியனுக்கு இது ஒரு பாரமா?



இப்படி ஊட்டி விடறதுன்னு சமபந்தி போஜனத்துக்கு நான் எப்பவும் தயார்!





சவானை அம்போன்னு விட்டுட்ட இ. காங்கிரஸ் மாதிரி என்னை விட்டுட்டுப் போயிட்டாரே. நியாயமா? நீயே சொல்லு!

இது வேணும்னு ரப்பர் பாம்பா இருக்கலாம்; ஆனு. நியூட்ரான் குண்டை வைச்சுக்கிட்டு விளையாடுறாரே, ரேகன், விபரீதத்துக்குத்தானே!



ஐய்யய்ய என்னமோ புதிய தலைதகர்னு சொன்னுங்களேன்னு நடையா நடந்து வந்து பார்த்தா...., பூ! இவ்ளோதானு?

கருத்து :
குட்டிகிருஷ்ணன்

படங்கள் உதவி:
சலன்

# நடுவே ஓர் உலகம்

## அக்ஷயன்



மரக்கிளைகளினூடே. தெரிந்த வானின் பகுதியை வெறித்து நோக்கிக் கொண்டிருந்தாள் நீலா. ஊன்றியிருந்த கையின் அழுத்தம் குறையவே; காகிதம் காற்றில் படபடத்தது. சிந்தனையிலிருந்து விடுபட்ட அவள் தொடர்ந்து எழுதத் தொடங்கினாள்.

'இதைப் படிக்கும்போது உங்களுக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டு வரும்... எனக்கு அக்கறையில்லை—'

—கீழே ஹாலில் காலிங் பெல் ஒலித்தது. எழுதியவற்றைச் சரேலென்று டிராயருக்குள் தள்ளிவிட்டு எழுந்தாள். விகவிகவென்று படிகளில் இறங்கினாள். மாஜிக் ஐ வழியாக போஸ்ட்மேனின் கச்சலான உருவம் தெரிந்தது. புக் போஸ்டில் வந்திருந்த அந்த வாரத்திய 'பொன்னி' இதழை வாங்கிக் கொண்டு கதவைத் தாளிட்டாள். மேஜை மீது அதை வைத்துவிட்டு, மீண்டும் மாடிக்கு வந்தாள்.

....'நீங்கள் மணக்கவிருந்த பெண் வஞ்சித்து விட்டாள். அந்த ஏமாற்றத்தில் சித்திரவதை செய்தீர்கள் என் அன்னையை! ஆத்திரத்தைக் கொட்ட உங்களுக்குக் கிடைத்த பாத்திரம் அவள்! தான் அனுபவித்த வேதனை என் உருவில் வெளி வந்ததால் எனக்காக வாழ முற்பட்டாள். வாழ விட்டீர்களா அவளை? அம்மாவும் பிள்ளையும் சேர்ந்து கொண்டு நோகடித்தே சாகடித்து விட்டீர்களே அவ்வுத்தமியை... என்ன, ஆத்திரம் பீறிக் கொண்டு வருகிறதா? வாழ்நாளெல்லாம் தனக்குள் புழுங்கிய என் அன்னை படுத்த படுக்கையாகக் கிடந்த போது ரகசியமாக என்னிடம் கூறியவை தாம் இச்செய்திகள்... இவ்வுலகம் சுமத்திய பளுவை இங்கேயே இறக்கி விட்டுப் போகத் துடித்தாள் போலும்!

'இரண்டாம் தாரம் இரண்டாம் தரமாக அமைந்தாலும் ஓரளவு தன்னைத் தானே தேற்றிக் கொள்ளலாம்; கீழ்த்தரமாக அமைந்து விட்டால் கட்டிக் கொண்ட பாவத்தை அனுபவித்துத்தானே தீர வேண்டும்!... யார் செய்த புண்ணியமோ, தங்களுக்கு அந்தத் தொல்லை இல்லை. நான் செய்த பாவம் நன்றாக அனுபவித்து விட்டேன்! தங்களது இளம் மனைவி பற்றி மரியாதைக் குறைவாக எழுதியிருப்பதைப் படித்துவிட்டுத் தாங்கள் துள்ளிக் குதிப்பதற்கு முன் ஒரு வார்த்தை— தந்தைக்கு மகள் எழுதும் கடிதமாக இதை நான் கருதவில்லை.... நிற்க,'

கீழே யாரோ கதவை மெல்லத் தட்டினார்கள். இறங்கிச் சென்றவள் மின் விளக்கைப் போட்டுப் பார்த்தாள். கரண்ட் இருந்தது. பின் ஏன் காலிங் பெல் ஒலிக்கவில்லை?... மாஜிக் ஐ வழியாகப் பார்த்தாள். எவரும் நிற்கவுமில்லை....சற்றுத் தயங்கினாள். கதவு மீண்டும் தட்டப்பட்டது. தாழ்ப்பாளை நீக்கி, ஒருக்களித்தபடி நோக்கினாள். சசி நின்றிருந்தான். அடுத்த போர்ஷனில் குடியிருக்கும் பையன்.

''நீலாக்கா, சோவமா இருக்கியா?'' — சிரமப்பட்டுத் தெளிந்த அந்தப் புன்முறுவலிலும் ஒரு தீவிரத்தைக் கண்டுவிட்ட— 'மாஜிக் ஐயில் சிக்காத' — அந்தப் பொடியன் கேட்டான்.

''....இல்லேடா கண்ணு...என்னவேணும் உனக்கு?''

''அம்மா பொன்னிப் புச்சகம்கேட்டாங்க'' தான் அணிந்திருந்த புதிய ஸ்லிப்பர்களை ஒருமுறை பார்த்துக் கொண்டான் அவன்.

உறையிலிருந்து புத்தகத்தை உருவி அவனது பிஞ்சுக் கையில் வைத்தாள். சட்டென்று கண்கள் பனித்தன.

சசி போய்விட்டான். மண் தரையில் பாதச் சுவடுகள் திட்டுத் திட்டாகத் தெரிந்தன.

''மென்மையான உணர்வுகளைப் பெற்றிராவிடினும், மற்றவரின் அத்தகைய உணர்வுகளை மதிக்கும் தன்மையாவது இருக்கவேண்டும். ஏதோ உபதேசம் செய்வதாக எண்ண வேண்டாம். தங்களிடம் மருந்துக்குக்கூட இல்லாத நற்பண்புகளை அலச எனக்கு நேரமும் இல்லை.

''நான் பட்ட கஷ்டம் நீ படக்கூடாது நீலு... இதுதான் என் பிரார்த்தனை' என்று உயிர் பிரியும்வரை புலம்பிக் கொண்டேயிருந்தாள் என்னைப் பெற்றவள். முதன் முதலில் என்னை ஈர்த்தது சுதாகரின் இனிய சுபாவமே அன்றி உடற்கட்டு அல்ல என்பதுடன், அவரை மணந்தால் என் அன்னையின் ஆத்மா சாந்தியடையுமென்று நான் உறுதியாக நம்பியிருந்ததையும் குறிப்பிட விரும்புகிறேன்.

''வெளியே ஓரிரு முறை சந்திக்க நேரிட்ட போதும், 'கல்லூரி நாட்களில் சரி; இப்போது அகஸ்மாத்தாக நாம் எதிர்ப்பட்டுப் பேசுவதுகூட வீண் வதந்திக்கு இடமளிக்கும்; கூடிய விரைவில் நான் உன் தந்தையைச் சந்திக்கவருகிறேன்' என்றார்...ஹி ஈஸ் எ ஜெண்டில்மேன்!''

நீலாவுக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது. நடராஜர் படம் போட்ட காலண்டர் லேசாகக் காற்றில் அசைந்தது. விறு விறுவென்று தொடர்ந்து எழுதினாள் அவள்.

''பள்ளிப் பருவத்திலேயே பெற்றோரை இழந்துவிட்ட அவர், யார் யார் வீட்டிலோ தங்கிப் படித்தார். கஷ்டப்பட்டு முன்னேறி எம். ஏ.யில் முதல் வகுப்பில் தேறினார். கடவுள் கிருபையால் நல்ல வேலையில் இருக்கிறார்....

''அன்று மாலை சாரு வீட்டுக்குப் போய் விட்டுத் திரும்பும்போது எதிர்பாராத வகையில் சுதாகரைச் சந்தித்தேன். வியப்புடன், 'ஏது இந்தப் பக்கம்' என்று கேட்டேன்.

'ஆபீஸர் ஒருவர் இந்தத் தெருவில் இருக்கிறார்... பார்க்க வந்தேன்' என்று அவர் கூறிக் கொண்டிருக்கும்போதே அப்பகுதியில் எங்களுக்கு மிக அருகே இருந்த டீக்கடையிலிருந்து பெரும் கூச்சல் எழுந்தது. ஏதோ கலாட்டா. அது முற்றிவிடவே எனக்கு ஒரே பயமாகப் போய்விட்டது.

''கவலைப்படாதே... உன் தெரு வரை துணை வருகிறேன்'' என்று அவர் சொல்ல, இருவரும் நடக்க ஆரம்பித்தோம். நம் தெரு முனை வந்ததும், விடை பெற்றுக் கொண்டார்.



'நன்றாக இருக்கிறது... இவ்வளவு தூரம், வந்துவிட்டு வீட்டுக்கு வராமல் போவதா?' என்று அழைத்தேன். 'இல்லை... நண்பர் ஒருவரை லாட்ஜில் என் அறைக்கு வரச் சொல்லியிருக்கிறேன். இப்போது உன் வீட்டுக்கு வந்தால் உடனே திரும்பவும் முடியாது. ஸாரி... இன்னொரு நாள் வருகிறேன்...வரவேண்டுமே!' என்று கூறிவிட்டுப் போய்விட்டார். அச்சமயம்தான் தெரு முனையில் எங்களைப் பார்த்து விட்டிருக்கிறான், தங்களின் இரண்டாந்தாரம்!'

''மறுநாள் காலைவீடே அதிர்ந்தது. என்னை நீங்கள் பேச விட்டால்தானே? பொறுமையுடன் நின்றேன். தங்கள் இரைச்சல் சற்று ஓய்ந்தபோது, 'தயவு செய்து கத்த வேண்டாம். நீங்கள் பேசுவது எனக்கு மட்டும் கேட்டால் போதுமே' என்றேன். குரலை இன்னும் உயர்த்தி, 'தெரியட்டுமே... நாலு பேருக்குத்தான். உன் லட்சணம்' என்றீர்கள். அதன் விளைவுதான் அணு அணுவாகச் செத்துக் கொண்டிருக்கிறேன்.

''என் லட்சணத்தை உங்களது இரண்டாந் தாரத்தின் இரண்டும் கெட்டான் குழந்தைகள் கேட்டுக் கேட்டு மகிழ்ந்தன. சசியின் அம்மா போர்டிகோவரை வந்து கூடுமானவரை ரசித்துக் கொண்டாள். அதுமட்டுமா, காரைத் துடைக்கத் தண்ணீர் மொள்ள வந்த உங்கள் டிரைவர், பாத்ரூம் பக்கமாக ஒதுங்கி நின்று ஒட்டுக் கேட்டான்.

''இவ்வளவு பெரிய வீட்டில் எனக்குள்ள மரியாதையையும் தரப்பட்டிருந்த ஸ்தானத்தையும் புரிந்து கொண்டு விட்டான். கூனிக் குறுகிக் கொண்டு இதை எழுதுகிறேன். பருவக் கிளர்ச்சியால் உடலின் பந்துக்கு ஏங்கித் தவிப்பதாக என்னை எடை போட்டுவிட்ட அவன், நீங்கள் யாரும் இல்லாத சமயம் பெட்ரோல் டின்னை வைக்க உள்ளே வந்தான். வழக்கம் போல் அதை வாங்கிக் கொண்ட என்னிடம் தகாத முறையில் நடந்து கொண்டான். அதிர்ச்சியடைந்த நான் மேஜையிலிருந்த ரூல் தடியினால் ஒரு போடு போட்டேன். அதுநாள்வரை என்னை ஏறிட்டுப் பாராத அந்தப் பயல், நான் கொடுத்த அடியைச் சாகும்வரையில் மறக்க மாட்டான்! உண்மையில் தங்களது காட்டுமிராண்டித்தனத்துக்குக் கிடைத்த அடி அது என்பதைத் தாங்களும் மறக்கவேண்டாம்....

''எப்படியானால் என்ன? கொஞ்ச நஞ்சமிருந்த மன அமைதியையும் இழந்துவிட்டேன். நான். இவ்வளவு கேவலமாக என்னை நோக்கும் மிருகங்களின் மத்தியில் நான் ஏன் வாழ வேண்டும்? உலகிலுள்ள அத்தனை பேரும் இவ்வீட்டுக்குள் மூலைக்கு மூலை ஒளிந்து கொண்டு என்னைக் கற்பழிக்கக் காத்திருப்பது போன்ற ஓர் உணர்வு என்னை வாட்டி வதைக்கிறது. பைத்தியமாகத் திரியும் அவல நிலையை அடைவதற்குள் இங்கிருந்து நான் வெளியேறிவிட வேண்டும்.

''ஆம்.. ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன். இக்கடிதம் தங்கள் கையில் கிடைக்கும்போது —பயப்பட வேண்டாம் — நான் உயிரோடு தான் இருப்பேன்; இவ்வீட்டில் இருக்க மாட்டேன். வீட்டைப் பூட்டி விட்டுத்தான் செல்கிறேன்; கவலை வேண்டாம். டூப்ளிகேட் சாவிதான் உங்களிடம் இருக்கிறதே!

''சுதாகரை இழுத்துக் கொண்டு ஓடிவிட்டதாகக் கற்பனை செய்ய வேண்டாம். தங்களின் இரண்டாம் தாரம் வீணாக அலட்டிக் கொள்ளப் போகிறார்கள்!...என்னைத் தேடும் கஷ்டத்துக்கு உங்களை உள்ளாக்கப் போவதில்லை. தென்னிந்திய டவுன் ஒன்றில் பெண்களுக்கான டியூட்டோரியல் காலேஜில் எனக்கு லெக்சரர் வேலை கிடைத்திருக்கிறது. ஸ்தாபகர் உட்பட அனைவரும் பெண்களே! நாங்கள் பாதுகாப்பாக வாழத் தனி அறை தந்திருக்கிறார்கள். எப்போதோ அப்பா செய்தது. இப்போது — தக்க சமயத்தில் உதவியிருக்கிறது. என் ஒருத்திக்கு இந்தச் சம்பளம் அதிகம்தான். குறைந்த பட்சத் தேவைக்குப் போக மீதியைத் தங்களுக்கு அனுப்பி விடுகிறேன். எனது இருப்பிடத்தை அறிய அதிக வாய்ப்பு இருப்பதால் மற்றுமொரு வேண்டுகோள் — தயை செய்து என்னைச் சந்திக்க முயல வேண்டாம். தங்களைக் கண்டால் உணர்ச்சி வசப்பட்டு ஏதேனும் செய்து கொண்டாலும் செய்து கொண்டு விடுவேன். தற்கொலையை வெறுப்பவள் நான். எனவே இச்சிறு வேண்டுகோளைப் புறக்கணிக்காதீர்!

''உங்கள் டிரைவர் திருடனுக்குத் தேள் கொட்டிய நிலையில் இருக்கிறான். வீணாக விஷயத்தைக் கிளறி இன்னும் குழப்பங்களை உருவாக்க வேண்டாம். அத்துடன் விட்டுவிடுங்கள் அதை! என் கல்யாண விஷயமாக வருபவர்களிடம், 'ஜாதகப்படி திருமணமானவுடனே விதவையாகிவிடுவாள் அவள்... கொடிய தோஷம் இருக்கிறது. வேலை பார்க்கும் யோகம் மட்டும் இருப்பதால் உறவினருடன் தங்கி, சொந்த ஊரில் ஒரு வேலையில் இருக்கிறாள்' என்று நாசூக்காகச் சொல்லிவிடலாம். தயவு செய்து கல்யாண விஷயத்தை மறந்துவிடுங்கள். என் மன அமைதியை உத்தேசித்து இதை எழுதுகிறேன். —நீலாயதாட்சி.''

தஞ்சாவூரில் தனக்கென்று தரப்பட்டிருந்த அறையில் அமர்ந்தபடி சுதாகருக்கு எப்படி எழுத ஆரம்பிப்பது என்று குழம்பிக் கொண்டிருந்தாள் நீலா. அதே சமயம், அவசர வேலை நிமித்தம் பெங்களூர் வந்திருந்த சுதாகர், விபத்தொன்றில் கோர மரணமடைய, தகவலை யாருக்குத் தெரிவிப்பது என்று தவித்துக் கொண்டிருந்தனர் போலீஸார்!

''வேலைக்காரி வேலையை விட்டு விலகிட்டாளா ஏன்?''
''டி. வி. செட்டை விற்றுட்டோம், அதான்''
—கீழை அ. கதிர்வேல்



# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ் ஷாம்பூ:
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்




பாமோலிவ். எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது. வளமையான நவீன ஷாம்பூ. உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது. பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும். ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது-உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GK6E PS.7 TM

உங்களைப்
போன்றவர்களை திருப்தி
செய்ய சார்மினரால்தான்
முடியும்




சற்றே இளைப்பாற! சார்மினருக்கு இணையுண்டோ

1 ரூபாய்க்கு 10*

* அதிகபட்ச விலை. தலவரிகளைப் பொறுத்தது.

சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது

STATUTORY WARNING. CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH

பிரதான டீலர் ; மெஸர்ஸ் A. ஆறுமுக முதலியார் ஏஜென்சீஸ், திருவண்

# எண்பதாண்டு இளைஞர்

## ரசிகமணி ரசித்த மணிகள்

வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார் அவர்கள் ஒரு முதுபெரும் புலவர். பெரிய குடும்பத்தில் பிறந்து பெரிய பதவிகள் வகித்தவர். ஆங்கிலமும் தமிழும் நன்கு கற்ற அறிஞர். மில்டனுடைய காவியத்தைத் தமிழிலே வடித்தவர். அகலிகை கதையை வெண்பாவில் பாடியவர். எல்லாவற்றுக்கும் மேலாக ரசிகமணியின் அன்புக்கும் மதிப்புக்கும் உரியவர். அவருக்கும் ரசிகமணியிடம் எல்லை கடந்த அன்பும் மதிப்பும்!

முதலியார் அவர்களுடைய எண்பது ஆண்டு நிறைவு விழா டாக்டர் மகாமகோபாத்யாய சுவாமிநாதய்யர் தலைமையில் திருநெல்வேலியிலேயே நடந்தது. விழாவுக்கு வந்த பாடல்களிலே ஒரு வாழ்த்து—வெண்பா இருந்தது! பாடலை எழுதியவரின் கடிதம் எங்கோ தவறிவிட்டது. உடன் இணைப்பாக வந்த பாடல் மட்டும் டி.கே.சி. மேஜையிலே வைக்கப்பட்டது.

பாடலைப் பார்த்தார் டி.கே.சி. ''இது கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை எழுதிய பாடல்தான்! சந்தேகமில்லை'' என்று தீர்மானமாகச் சொன்னார் டி.கே.சி. ''இந்த வெண்பாவை எழுதக் கூடியவர் இன்றைக்குக் கவிமணி ஒருவரே!'' என்றார் ரசிகமணி! அந்தப் பாடலுக்குள் அதை எழுதிய உருவமே டி.கே.சி.யின் சகாவியக் கண்களுக்குப் புலனாகிவிட்டது!

அந்தப் பாடல் தேசிக விநாயகம் பிள்ளை இயற்றியது என்ற குறிப்புடன் விழாவில் அச்சாகி விநியோகம் செய்யப்பட்டது. சந்தேகமென்ன? அது கவிமணி எழுதியனுப்பிய வெண்பாதான் என்று பிறகு புத்தேரியிலிருந்து தகவல் வந்தது.

விழாவின் தொடக்கத்தில் டி.கே.சி.யின் புதல்வர் ''தீபன்'' தமது தேன் குரலில் கல்யாணி ராகத்தில் சுத்தாங்கமாக அதைப் பாடினார்:

எண்பதாண் டான
இளைஞனே! இன்னமுதின்
பண்பெலாம் காட்டு தமிழ்ப்
பாவலனே — நண்பனே
வெள்ளகால்ச் செல்வனே
வேள்சுப் பிரமணிய
வள்ளலே வாழ்க
மகிழ்ந்து!

இந்தப் பாடலுக்குள்ளே தேசிக விநாயகம் பிள்ளையவர்களின் கவித்துவத்தோடு, ரசிகமணியின் கவி உருவ தரிசனமும் பதிந்து இருக்கிறது! ஒரு இலக்கிய வரலாறே இந்தப் பாடலுக்குள் இப்படிப் பின்னிக் கிடக்கிறது என்றே சொல்ல வேண்டும்.

### மீ.ப. சோமு

'எண்பதாண்டான இளைஞன்' என்று கவிமணி அழைத்த இந்த முதுபெரும் புலவரைப் பற்றி அந்த விழாவை ஒட்டி வெளிவந்த கலைமகள் மாத இதழில் ரசிகமணி என்ன எழுதினார் என்பதை இப்போது படித்துப் பார்த்தாலும் ரசமாக இருக்கிறது.

கட்டுரையின் ஒரு பகுதி:

''இந்த உலகில் சிலர் முஷ்டி யுத்தத்துக்கென்றே பிறக்கிறார்கள். அப்படிப் பிறந்தவர்களில் ஒருவர் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள். முஷ்டி யுத்தம் செய்ய வேண்டிய அவசியம் இரண்டு கைகளிலும் உள்ள தசை நரம்பு எலும்புகளில் அமைந்து கிடக்கிறது. உடல் உறுப்புக்களில் கிடப்பது ஒருபுறம் இருக்க ரொம்ப ஆழமாயும், அசைக்க முடியாதபடியும் பதிந்து கிடப்பது உள்ளத்தில்தான்.

''கைக்குத்துச்சண்டைக்குப்பயின்றிருந்தால் முதலியாரவர்கள் உலகப் பிரசித்தி பெற்ற வீரர்களை ஒரு கை பார்த்திருப்பார்கள். என்ஜினீர்த் தொழிலில் பிரவேசித்திருந்தால் குறைந்தபட்சம் பொதிகை மலையையாவது ஒரு குடை குடைந்து, மலையாளத்து மலை வெள்ளத்தைக் குடைச்சல் வழியாக வடித்துத் தமிழ் நாட்டை வளம்படுத்த முயன்றிருப்பார்கள். அவர்கள் கைக்கு முன் பாறைகள் எல்லாம் நொறுங்கிப் போயிருக்கும்.

''என்ஜினீர்த் தொழில் இல்லை யென்றால் ஜாதகம் பொய்த்தாவிடும்? பாறைகளும் கருங்கல்லும் தமிழில் இருக்கத்தானே செய்கின்றன?

''பதினாறு வயதாய் இருக்கும்போதே தமிழில் உள்ள சிலேடை, திரிபு, யமகம் என்ற தமிழ்க் கற்பாறைகளை உடைக்க ஆரம்பித்து விட்டார்கள். இந்த வர்க்கத்துச் சித்திரக் கவிகள் எவ்வளவு வைரம் பாய்ந்திருந்தாலும் முதலியார் அவர்கள் கைக்கு வந்தால் தாமா

✠ வெள்ளகால் முதலியார்



கப் பிதிர்ந்து போய்விடும். தமிழ்ப் பாஷை இடங் கொடுக்கக் கூடிய சிலேடை விந்நியாசங்களை யெல்லாம் ஒருவாறு அளந்து விட்டார்கள். அதனுலேயே 'நெல்லைச் சிலேடை வெண்பா'வை (நூறு செய்யுள்) எளிதில் செய்துவிட முடிந்தது. அது அந்தக் காலத்துப் (ஐம்பது வருஷத்துக்கு முந்திய காலத்து) புலவர்களுக்கும் கவிராயர்களுக்கும் பெரும் வியப்பாகவே இருந்தது. சிலேடை யமகங்களிலுள்ள விசித்திரங்களை அனுபவித்துப் பழகியவர்களுக்குத்தான் நெல்லைச் சிலேடை வெண்பாவின் திறம் தெரிய வரும்.

''தமிழ் நூல்களை முறையாகப் படித்து முடித்தவர்கள் கூடக் காஞ்சிப் புராணமும் தணிகைப் புராணமும் 'இருப்புக் கடலை' என்று சொல்லுவார்கள். அவற்றின் பாட்டுக்கள் ஒவ்வொன்றிலும் அநேகமாய்ப் பலமான முடிச்சு ஒன்ருே இரண்டோ போட்டு வைத்திருக்கும். ஆனுல் முதலியாரவர்கள் எப்படியாவது முடிச்சுக்களை இழை இழையாக அவிழ்த்து இழைகளைக் கையில் தூக்கி உதறிக் காட்டுகிற மாதிரி ,அச்செய்யுட்களிலுள்ளபொருட்களை முறைப்படுத்திக்கருத்தை விளக்கிக் காட்டுவார்கள்.

''மேலும், மில்டனுடைய 'சுவர்க்க நீக்கம்' பளுவான கருங்கற் பாறை என்று ஆங்கிலப் புலவர்கள் சொல்வார்கள். இதர பாஷைகளில் மொழிபெயர்க்க முடியாதபடி கஷ்டமாய் அமைந்தது. அதை ஒரு ஆசிரியர் பிரெஞ்சு பாஷையில் மொழி பெயர்க்க ஆரம்பித்துத் திணறிப்போய்விட்டாராம். அப்பேர்ப்பட்ட இதிகாசத்தை இவர்கள் தமிழில் மொழி பெயர்க்கத் துணிந்து, முதற் காண்டத்தை விருத்தப்பாவில் மொழி பெயர்த்து விட்டார்கள். மூலத்திலுள்ள ஒவ்வொரு விஷயமும் அதன் அடைகளுமே அப்படி அப்படியே இவர்களுடைய விருத்தத்தில் அமைந்து கிடக்கும். மூலத்தையும் மொழிபெயர்ப்பையும் ஒத்துப் பார்த்தால் இது பகீரதச் செயல் என்றே தோன்றும். ஜி. யு. போப் முதலான ஆசிரியர்கள் இம் மொழிபெயர்ப்பைப் பார்த்து 'இது ஒரு அசாத்தியமான வேலை' என்று அதிசயித்திருக்கிறார்கள்.

''மேலே சொன்னதெல்லாம் முஷ்டி யுத்த சக்தி முதலியாரவர்களிடத்தில் அடங்கிக் கிடக்கிறது என்பதைக் காட்டுகின்றன. ஆனுல் அதை வெளிப்படையாக இன்றும் அவர்களுடைய எண்பதாவது வயதிலும் காணலாம். ஏன், சென்ற அறுபது வருடமாகவே முஷ்டி யுத்தம் செய்து கொண்டே வந்திருக்கிறார்கள் என்ருல் கலப்பில்லாத உண்மை. சென்னை மில்லர் காலேஜில் மாணவராயிருந்தபோது ஆரம்பித்தது இன்னும் நடந்தே வருகிறது. 'இங்கிலீஷ் பாஷைதான் முக்கியமாகத் தெரிய வேண்டியது; தமிழ் தெரிய வேண்டியதெல்லாம் அலங்காரத்துக்காகத்தான்' என்று யாராவது முதலியாரவர்கள் முன்னிலையில் சொல்லிவிட வேண்டியது; அவ்வளவுதான், வீராவேசம் அப்படியே வந்துவிடும்; பொங்கிவிடும். அடங்கிக்கிடந்த முஷ்டி யுத்த வீரன் வெளிக் கிளம்பிவிடுவான். பக்கத்தில் நிற்க நேர்ந்தவர் பாடு ஆபத்துத்தான்''.

குற்ருலத்து அருவியைப் போலவே ரும் மாளி போடுகிற ஓர் உரை நடையில் இவ்வாறு வெள்ளகால் முதலியாரவர்களைப் பாராட்டுகிற ரசிகமணி, 'அகலிகை வெண்பா' என்ற இந்த முதுபெரும் புலவரின் நூலையும் பாராட்டி ஒரு வெண்பாவே எழுதியிருக்கிருர். ஆம்; டி.கே.சி. எழுதிய வெண்பா அது!

அகலிகைவெண்பாவைப்படிக்கிறரசிகர்கள் எல்லாம் கதாபாத்திரங்களோடு இரண்டறக் கலந்து விடுவார்கள் என்கிருர் டி.கே.சி. அகலிகையாகவும், இந்திரனுகவும் கோதம முனிவனுகவுமே ஆகிவிடுவார்கள்! அது மட்டுமா?

அகலிகையின் கதையில் இன்னெரு முக்கிய கதா பாத்திரம் உண்டு அல்லவா? அகலிகையும், இந்திரனும், கோதமனும் போலவே அமைந்த முக்கியமான பாத்திரம் எது? சாபத்தைத் தாங்கி நிற்கும் கல்தான்!

இதோ டி. கே. சி. பாடிய வெண்பா:

மன்னும் உளஇயல்தேர்
 வண்கப் பிரமணியன்
பன்னும் அகலிகைவெண்
 பாப் பொருளை — உன்னுவோர்
எல்லாம் அகலிகையா
 இந்திரனக் கோதமனக்
கல்லாவும் ஆவார்
 கனிந்து!

உள்ளம் கனிந்து பழமாவது உண்டு. ஆனுல் அகலிகையின் துயரத்தில் கனிந்த ரசிக உள்ளம் கல்லாகவே மாறிவிடுகிறது என்பது கவியனுபவம். கனிவும் கல்லும் என்ற முரண் பாட்டுக்குள்ளே கவிப் பண்போடு சேர்ந்து ஒரு சாதுரியத்தை வெளியிடுகிறது ரசிகமணியின் வெண்பா!

---

**'நான் அஞ்சுஷேவிங்'குக்கு இன்னும் உனக்குக் காசு தரலேன்னு அவ்வளவு கரெக்டா சொல்லுறியே... எப்படி?"**

**"இதோ உங்க மூஞ்சில அஞ்சு வெட்டுக்காயம் பண்ணி வச்சிருக்கேனே!"**

— கிரிஜா மணாளன்



# பிரிட்டானியா பால் பிஸ்கட்

## வளரும் குழந்தைகளுக்கு சுவையான துணை




சத்துமிகுந்த,
சுவையான




**மில்க் பிக்கிஸ்**

# வேலைக்குப் போகும் பெண்

நடிப்பு:
டணால் தங்கவேலு

கதை:
சாருகேசி, தமயந்தி

சித்திரம்:
செல்லம்

போட்டோ: உத்ரா

7















பொண்ணு எல்லாம் பாக்க வேணும் அமிர்தம்! அவ வேலைக்குப் போறாளா இல்லையான்னு மட்டும் கேட்டுக் கிட்டாப் போதும்! ஏண்டா பன்னீரு, உனக்குத் தெரியுமாடா?

யாருப்பா, ஜமுனாவா? ஆகா...ம்...வந்து...ம் ...போறப்பா! வேலைக் குத்தானே போறளே!

பின்னே என்ன? புடிச்சிருந்தா முடிச்சிடறது!

அம்மா, அம்மான்னா நீதான், அம்மா! மத்தவங்க எல்லாம் சும்மா.

டேய் டேய், உடுடா, இல்லே, கையிலே இருக்கற தைக் கன்னத் திலே பூசிப் பிடுவேன்!



அவ வேலைக்குப் போறதில்லேன்னு தெரிஞ்சா, அம்மா கல்யாணத்தையே நிறுத்திடுவாங் களே அப்பா! என்ன பண்றது?

அட பயந்தாங் கொள்ளி மகனே, பயப்படாதே! முன்னாலே கல்யாணம், அப்புறம் வேலே.

தொடரும்

# அகில உலக இந்து மாநாடு 1982




இந்து சமய ஏற்றத்தைப் போற்றவும், எழுச்சியை ஊட்டவும்,
ஆன்மீக வளர்ச்சியை அகில உலகெங்கும் பரப்பவும்

இலங்கையில் கூடுகின்றது

## அகில உலக இந்து மாநாடு.

__நாள்:-__ 1982 ஜனவரி 22ஆம் திகதி முதல் 1982 ஜனவரி 26ஆம் திகதி வரை
ஐந்து நாட்களுக்கு நடைபெறும்.



__இடம்:-__ கொழும்பு

* பண்டாரநாயக்கா ஞாபகார்த்த சர்வதேச மாநாட்டு மண்டபம்.
* இராமகிருஷ்ணமிஷன் சர்வதேச மாநாட்டு மண்டபம்.
* கதிரேசன் மண்டபம்.
* டவர் மண்டபம்.
* சரஸ்வதி மண்டபம்.

__நிகழ்ச்சிகள்:-__

* இந்து சமய ஆராய்ச்சிக் கருத்தரங்கு.
* சமய நூல்கள், சிற்ப ஓவியக் கண்காட்சி.
* கலை நிகழ்ச்சிகள்.
* கலாசாரச் சுற்றுலா

முதலிய நிகழ்ச்சிகள் இடம்பெறும்.

கலந்துகொள்வோர்கள்:- அகில உலக இந்துசமய சாதுக்கள், துறவிகள், சமயப் பெரியார்கள், யோகிகள், குருமகா சன்னிதானம், அறிஞர்கள், கவிஞர்கள் யாவரும் ஒன்று கூடுகின்றார்கள். ஆன்மீக அறிவூட்டும் கருத்துக்களை இந்து சமய மக்களுக்கு இம்மாநாட்டின் வாயிலாக வழங்க இருக்கின்றார்கள்.

தபால் பெட்டி இலக்கம்: 1700,
244, காலி வீதி, கொழும்பு-4.

பிரதேச அபிவிருத்தி, தமிழ்மொழி அமுலாக்கல்,
இந்துசமய இந்து கலாசார அமைச்சு.

**வே**று வழியில்லாமல் கலர்ப் படக் கட்சிக்குத் தாவிவிட்ட கே.எஸ்.ஜி. படம். கதை வசனம் டைரக்ஷன் தயாரிப்பு எல்லாம் மேற்சொன்னவரே. துள்ளித் திரியும் கதாநாயகிக்கு (ராதிகா) கேன்ஸர் என்றும், இன்னும் மூன்று மாதத்தில் இறப்பாள் என்றும் சுறு சுறுப்பில்லா டாக்டர் உணர்ச்சியில்லாமல் பேசி நாள் குறிக்கிறார். பெண் சாவதற்குள் அவளை மணக் கோலத்தில் பார்க்க ஆசைப்படுகிறார் சினிமாத்தந்தை (மேஜர்).

ஊட்டியில் ''உனக்கு நானும் எனக்கு நீயும்' என்று போட்டி போட்டுக் காதலிக்கிறது ஒரு ஜோடி. கதாநாயகி ஓய்வுக்காக ஊட்டி வர — சந்தர்ப்பச் சூழ்நிலைகள் காதலனை ஒப்புக்கு கேன்ஸர் நாயகியை மணக்கச் செய்கின்றன. அப்பா உயிரை விட்டு ஆத்ம சாந்தி அடைகிறார். பிறகு நாயகன் நாயகியை விட்டு விட்டுக் காதலியை (அருணா) மணக்கிறான். அவளைக் கவனிக்காமல் இவளின் கேன்ஸரைக் குணப்படுத்த ஊண் உறக்கமின்றி பைக்கில் மேட்டுப்பாளையம் போய் வேப்பிலை கொணர்ந்து கஷாயம் காய்ச்சித் தருகிறான்...தருகிறான். இதற்குள் புரிந்துகொண்ட மேக்கப்மேன் தாடி செய்து ஒட்டிவிடுகிறார்.

காதல் மனைவிக்கு ஒரு குழந்தை பிறந்து, நாயகிக்கு கேன்ஸரே இல்லையென்று ஜப்பான் ரிட்டர்ன் டாக்டர் பூர்ணம் போட்டு உடைக்கிறார். எல்லாம் சுபமாய் முடிய இரண்டு மனைவிகளை எப்படிச் சமாளிப்பது என்று பார்த்த கதாசிரியர் அருணாவை பார்க்கில் பாடச் சொல்லி பூநாகம் கடித்து நீலம் பாரித்து இறக்கச் சொல்கிறார். நாயகி கையில் குழந்தை மட்டும் 'தரப் படுகிறது. நாம் இருக்கையை விட்டு எழுந்திருக்கிறோம்.

இடைவேளை வரை கண்மண் தெரியாமல் ஓடும் படம் பிறகு மூச்சுவாங்கி முடிவில் தடுமாறுகிறது. மகா சுறுசுறுப்பு அருணா. ஓட்டம் துள்ளல். கேமரா இவரைக் குளோசப்பில் பார்க்காமல் இருப்பது நலம். காதலனை விளையாட்டாகக்கூட பிற பெண்களுடன் பேசவிடாத கேரக்டர் இவருக்கு. நாயகன் (புதுமுகம்) ராதிகாவை மணக்கச் சம்மதித்து அம்மாவிடம் கண் சாடை காட்ட அவர் அருணாவைப் பார்க்க — அவள் கோபித்து வெளியேறி — எல்லாரும் திகைக்க — பிறகு ''சம்மதிக்காத நீயும் ஒரு 'ஆணா'' என்று எதிர்பாரா அதிர்ச்சி தருவது சத்தான இடம்.

எல்லோரும் ஸ்பீக்கர் வைத்துக் கொண்டு கத்துகிறார்கள். காதுக்குப் பஞ்சு வேண்டும். டைரக்டர் பல வித முடிச்சுக்களைக் கதையில் போட்டு, குறைகளைப் பற்றி யோசிக்க டைம் தராமல் சாமர்த்தியமாய்க் கொண்டு போகிறார். இருந்தாலும் பழைய சமாசாரம். இருந்தாலென்ன உணர்ச்சிக் காவியம். குடும்பச் சித்திரம்.

| | |
|---|---|
| கதைக்கு | ரூ. 0–15 |
| பூர்ணத்துக்கு | ரூ. 0–15 |
| ராதிகாவுக்கு | ரூ. 0–10 |
| டைரக்டருக்கு | ரூ. 0–15 |
| ஆக மொத்தம் | ரூ. 0–55 |
| கொடுப்பது (தரை டிக்கட்) | ரூ. 1–00 |
| கிடைப்பது | ரூ. 0–55 |
| தண்டம் | ரூ. 0–45 |

-நளினிசாஸ்திரி



# சாமிபணம்

ஜி.பார்த்திபன்

'ஷோ' லேஸை முடிந்துவிட்டு நிமிர்ந்தான் சுந்தரம். அவன் முகத்தில் அவசரமும், படபடப்பும் கொடி பின்னிக் கிடந்தன. தாயாரைத் தேடி விழிகளைச் சுழற்றினான்.

பூஜை அறையிலிருந்து 'கணகண'வென்று எழுந்த மணிச் சத்தம் அவள் இருக்கும் இடத்தைச் சொன்னது.

உற்சாகத்துடன் பூஜை அறையை நோக்கி நடந்தான்.

அறைக் கதவு மூடியிருந்தது. இடது காலால் உதைத்துத் திறந்தான். கையில் பற்றியிருந்த கற்பூரத் தட்டைக் கீழே வைக்காமல் திடுக்கிட்டுத் திரும்பினாள் விஜயம்.

''இட் ஈஸ் கெட்டிங் லேட்.. நான் கேட்டது எங்கே?''

மென்னகையுடன் கற்பூரத் தட்டைக் கீழே வைத்தாள். தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். வணங்கினாள்.

''எதையடா கேட்கிறாய்?'' — அவன் பக்கம் திரும்பினாள்.

''என்னம்மா... இப்பத்தான் நிதானமா கேட்கிறே? இருநூறு ரூபாய் வேணும்னு சொன்னேனே?''

''இல்லேன்னு நீ கேட்டப்பவே நானும் சொல்லிட்டேனே?''

''எனக்கு நிச்சயமா வேணும். வேறே வழியே இல்லே!'' — உறுதியாகச் சொன்னான் அவன்.

''டேய், நீ கேட்டப்ப எல்லாம் கொடுத்துக்கிட்டுத்தானே இருந்தேன். திடீர்னு நேத்து நீ கேட்டே. என் கிட்டப் பணம் இல்லே. அப்பாவும் 'டூர்' போயிருக்காங்க. என்ன செய்யச் சொல்றே?'' — விஜயத்தின் குரல் பரிதாபமாக ஒலித்தது.

''உன் கிட்டப் பணமே இல்லே! அப்படித்தானே?''

''ஆமாம்!''

''அதோ, அதிலே இருக்கிறது பணமில்லேயா?''

சுந்தரம் சுட்டிக் காட்டிய இடத்தைப் பார்த்ததும் அவளுக்குப் பகீரென்றது.

'ஏழுமலையான் உண்டியலில் பிரார்த்தனைக்குச் சேர்த்திருக்கும் பணம் என்னுடையதா?'—

''சுந்தரம்....! அது சாமி உண்டியல். திருப்பதியானுக்குச் சேர வேண்டிய பணம்!''

எகத்தாளமாகச் சிரித்தான் சுந்தரம்.

''பிரமாதம் அம்மா! வர வர நீ ரொம்ப மோசமாயிட்டே. சாமி கிட்ட இருக்கிற அளவு பாசமோ பந்தமோ பெத்த பிள்ளை கிட்டே உனக்கு இல்லே!'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே அடி எடுத்து வைத்தான் அவன்.

விஜயம் பதறினாள். ''டேய்...டேய்...!'' சாமி அறைக்குள்ளே செருப்புக் காலோட வரியேடா? இது அடுக்குமா? நீ படிச்ச படிப்பு இப்படியாடா சொல்லியிருக்கு?''

''நான் படிச்ச படிப்பும் அடைஞ்சிருக்கிற பகுத்தறிவும்தான் உன்னைப் பரிதாபப் பொருளாக எனக்குக் காட்டுது. நீ சொன்னபடியே பார்த்தாலும் அந்தச் சாமியே எனக்கு உதவி பண்ணத் தீர்மானிச்சிருக்கு. நான் நேத்தே உண்டியலைக் கணக்குப் பண்ணிட்டேன். கரெக்டா இருநூறு ரூபாயும் சில்லறையும்தான் அதிலே இருக்கு. உன் ஆண்டவனே எனக்காக 'சேவிங்ஸ் அக்கௌண்ட்' வச்சிருக்கான்.''

நிதானமாக உண்டியலை எடுத்துத் திறந்து அதிலிருந்த பணத்தை எடுத்துத் தாயின் முகத்துக்கு எதிரே ஆட்டிக் காட்டிவிட்டு நடந்தான் சுந்தரம்.

விக்கித்து அமர்ந்து விட்டாள் விஜயம். கையைக் கூப்பி கண் கலங்கினாள்.

'ஆண்டவா! நல்லவனையும் பொல்லாதவனையும் அணைத்துக் காப்பவன் நீ. இது உன் பணம். அவன் எடுத்துச் சென்று விட்டான். இது அடுக்காது. ஆனால் அவனை இந்தக் குற்றத்துக்காகத் தண்டித்துவிடாதே. வட்டியுடன் உன் காணிக்கையைச் சேர்த்து விடுகிறேன். உன்னுடைய பணத்தை அவன் திருடிக் கொண்டு — ஆமாம், திருடிக் கொண்டுதான் போய்விட்டான். ஏழுமலையானே அவன் நல்லவிதமாக வீடு திரும்ப வேண்டும். அதுவரையில் நான் தண்ணீர் கூடக் குடிக்க மாட்டேன்'—

நினைத்து நினைத்துப் புலம்பினாள் அவள்.

அவளைப் பார்த்துக் கொண்டே இருந்த ஏழுமலையான் — படத்தில் அசையாமல் இருந்தபடியே — வேறுவிதமாகக் கணக்குத் தீர்த்துக்கொள்ள முடிவெடுத்து விட்டது அவளுக்குத் தெரியாது.

'**த**ண்டனை கொடுத்து விடாதே! ஏழுமலையானே, என் பிள்ளையை நல்லபடி திருப்பிக்கொண்டு வந்துவிடு!' உள்ளார்ந்த பிரார்த்தனையில் மூழ்கியவளாக, சோபாவில் இடந்தான் விஜயம்.

யாரோ உள்ளேவந்தது போல் ஓர் உணர்வு. வேலைக்காரி போன பின்னர் கதவைத் தாளிட மறந்துவிட்டது அப்போதுதான் அவளுக்கு நினைவுக்கு வந்தது.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

**மனைவி : 'நீ ரதியாட்டம் இருக்கே'ன்னு என்னைப் பார்த்துச் சொல்றப்பல்லாம் ஏன் கண்ணாடியைக் கழட்டிடறீங்க?**

**கணவன் : மனசாட்சி உறுத்துமேன்னுதான்!**

— எஸ். பாலகிருஷ்ணன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

தனக்குத் தானே கண்டித்துக் கொண்டு அவசரத்துடன் எழுந்தாள்.

இடது கையில் சோப்புப் பெட்டியும், தோளில் துண்டுமாக சுந்தரம் குளியலறைக்குப் போய்க் கொண்டிருந்தான். அவன் முகத்தின் கடுகடுப்பையும், கருமையையும் பார்த்து விஜயம் திகைத்து விட்டாள்.

'கடவுளே... என்ன நடந்தது என்று தெரியவில்லை. இருந்தாலும் எனக்காக என் பிள்ளையை வீடு சேர்த்தாயே... நன்றியப்பா'—

இதயபூர்வமாகச் சொல்லிக் கொண்டு பின்னாக்குக் காப்பி கலந்து வருவதற்காக உள்ளே சென்றாள் அவள்.

அறைக் கதவில் சுந்தரத்தின் சட்டை இடந்தது. அவனுடைய ஆத்திரமும், வெறுப்பும் அது வீசப்பட்டிருந்த அலங்கோலத்தில் தெரிந்தது.

'என்ன ஆயிற்று இவனுக்கு?' — சிந்தனையுடன் அதை எடுத்தாள். சட்டையை எடுக்கும்போது அதன் பையிலிருந்து ஒரு காகிதம் கீழே விழுந்தது. அதைக் குனிந்து எடுத்தாள். பிரித்துப் பார்த்தாள். இடுக்கிட்டுப் போனாள்.

கோர்ட்டில் அபராதம் கட்டியதற்கான ரசீது!

'என்னவோ செய்திருக்கிறான்' என்ற வேதனையோடு சேர்ந்தாற் போலவே ஒரு சமாதானம் எழுந்தது. 'அன்று உண்டியலை உடைத்ததை விடவும்பெரிதாக ஒரு தப்பு உண்டா?'

காகிதத்தை மீண்டும் சட்டைப் பையில் வைக்கப் போனவள் ஏதோ தோன்றவே பிரித்துப் பார்த்தாள்.

அபராதத் தொகை இருநூற்று இருபது.

அதிர்ச்சியும், அதிசயமும் ஊடுருவப் பார்த்தபடி நின்றவளின் உடலில் மின்சாரம் பாய்ந்தாற்போல் இருந்தது.

கண்ணீர் ஊற்றாகப் பெருக,கை கூப்பினாள்.

''உன் பணமப்பா... இது உன் பணம்!''

விஜயத்தின் கையிலிருந்த ரசீது நழுவியது.

பணம் பெற்றுக் கொண்ட கோர்ட்டினார்க்கின் கையெழுத்து சத்ய தரிசனம் போல் பளிச்சென்று மின்னியது. 'வேங்கடேசா!'

# உங்கள் அழகுக்கு அழகூட்டும் குங்குமம்

## புதிய சுமங்கலி டீலக்ஸ் குங்குமம்

இன்று தன் இயற்கை எழிலை எந்த மங்கையும் மேலும் பொலிவுறச் செய்யலாம். உங்கள் ஒப்பனைக்கு மேலும் மெருகூட்டுவது சுமங்கலி குங்குமம்.

கொஞ்சம்கூட வெளியே சிந்தாத சிறந்த பாக்கிங்கில் வரும் குங்குமம் அது ஒன்றே. ஆகவே அது உங்கள் கைப்பையிலோ அல்லது டிரஸ்ஸிங் டேபிள் மேலோ வைத்துக்கொள்ள உகந்தது. சுமங்கலி உங்களுக்குப் பிடித்தமான பலவித வண்ணங்களில் கவர்ச்சியான ஜாடிகளிலும், பௌடர் உருவிலும் மற்றும் டீலக்ஸ் பர்ஸ் பாக்கிங்குகளிலும் கிடைக்கிறது.




டீலக்ஸ் குங்குமம்

**சுமங்கலி**

ஒரு கேசவர்த்தினி தயாரிப்பு

OBM 4952/TM

# துரோகம்... துரோகம்...

எஸ். குமார்

பிரகாஷ் காரை விட்டு இறங்கினான். நடந்தான். ஹாலுக்குள் நுழைந்தான்.

அவனைக் கண்டதும் சின்ன பரபரப்பு.

சேம்பருக்குள் நுழைந்தான்.

''குட் ஈவினிங் சார்.''

சிவநேசன் சிரித்து அங்கீகரித்தார்.

''பணம் எடுத்துக்கிட்டுவந்துட்டீங்களா?''

''யெஸ், சார்.''

பெட்டியைத் திறந்தான்.

கரன்ஸி வாசனை.

கட்டுக்கட்டான நோட்டுகள்.

ஒரு லட்சம்.

ஒரு கணம் அவன் சலனப்பட்டான். இது மட்டும் கையிலிருந்தால்—

''ஸேஃப்ல வச்சிடுவோம்.''

லாக்கரைத் திறந்தார்.

அவன் உள்ளே பணத்தை அடுக்கினான்.

லாக்கரை மூடினார்.

''பிரகாஷ், வீட்டுக்குப் போய் ரெஸ்ட் எடுத்துக்குங்க. நாளைக்குக் காலையிலஃப்ரஷ்ஷா வாங்க. டிஸ்பர்ஸ் பண்றதுக்குச் சுலபமா இருக்கும்.''

வெளியே வந்தான்.

பார்க் செய்திருந்த ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தான். லட்சம் இருந்தால்...

போன மாதம் விபசாரத் தடைச் சட்டத்தில் கண்ணி வைத்து கைது செய்யப்பட்ட ஜாமீனில் விடுதலையான அவன் கனவுக் கன்னியோடு சில நாட்கள் தங்கலாம்.

தீர்மானித்தான். பறந்தான்.

குப்பம். அழுக்கான குழந்தைகள். மனிதர்கள். வீடுகள்.

மனத்திலும் அழுக்கானவன் மாரி.

ஸ்கூட்டரைப் பூட்டிவிட்டு மாரியின் வீட்டை அடைந்தான்.

மாரிக்கு அவனைப் பார்த்ததும் பல்லெல்லாம் சிரிப்பு. ''வா, தொரே. இன்னா அபூருவமா இந்தப் பக்கம் வந்துகிறே?''

''உன்னைப் பார்க்கத்தான்!''

மாரி பையனைக் கூப்பிட்டான்— ''டே, கேப்மாரி, சாருக்கு நாயர் கடையில டீ வாங்கியாடா.''

(மாரி அவனுக்குக் குடும்பப் பெயர். பிள்ளைகள் கேப்'மாரி'யில் தொடங்கி சோ'மாரி' வரை.)

''அதெல்லாம் வேணாம். ஒரு முக்கியமான விஷயம்.''

சொன்னான்.

''தொர எனக்குத் தெரிஞ்சி உங்க ஆபீஸ் மாதிரி எடத்துல கமுக்கமா கை வைக்கறதுக்கு மெஹ்ராதான் சரியான ஆள்.''

''அவன் எங்கே இருக்கான்?''

சொன்னான். ஸ்கூட்டரில் விரைந்தார்கள்.

பிரகாஷ் தெளிவாக விளக்கினான்.

மெஹ்ரா கவனமாகக் கேட்டுக் கொண்டான்.

''ரெண்டு மணிக்கு நேரா என் ஆபீசுக்கு வந்துடு. 'உனக்காக நான் அங்கே காத்துக்கிட்டிருப்பேன்.''

''கிடைக்கிறதை... .''

''பிஃப்டி — பிஃப்டி.''

பிரகாஷ் தூங்காமல் விழித்திருந்தான்.

இரவு ஒரு மணி. டைம்பீஸின் டிக்டிக் இதயத்தை நெருடியது.

சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டான்.

காலம் கரைந்தது

1–30.

வெளியே வந்தான். ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தான். பறந்தான்.

அலுவலகக் கட்டிடத்துக்கு ஒரு ஃபர்லாங் முன்னால் நிறுத்தினான்.

இருட்டு ஓரங்களில் நடந்தான்.

அலுவலக வாசல். வாட்ச்மேன் உட்கார்ந்தே தூங்கினான். அவனைக் கடந்தான். நுழைவாயில் திறந்திருந்தது.

யோசித்தான். வாட்ச்மேனைத் தொட்டான். அவன் சாய்ந்தான்.

பிரகாஷ் அவசரமாக உள்ளே நுழைந்தான்.

சேம்பரைத் திறந்தான்.

லாக்கர் திறந்தே இருந்தது.

'பிரகாஷ்; மெஹ்ரா துரோகம் செய்து விட்டான். உடனடியாகத் தப்பித்துக்கொள்'

—அறிவு நம்பர் ஆறு அறிவித்தது.

வேகமாய் வெளியே வந்தான்.

வாசலில்—

கொள்ளையடித்து வெளியேறிய பின் மெஹ்ரா தந்த அனுமதேய டெலிஃபோன் தகவலால் வந்த— போலீஸ் ஜீப்.

# சுவர்ணமுகி

## ஸ்ரீவேணுகோபாலன்

...மூத்த பையனுக்கு 18 வயது. ஆனால் அவனை விட்டுவிட்டுச் சிறிய பையனை 12 வயது ராம தேவனை அந்தச் சலவை தொழிலாளி தனது அழுக்குக் கூடையில் போட்டு மறைத்து...

-பர்ரா டாஸின் 12-12-1916கடிதம்

## 24

மூன்று மாதங்கள் சென்ற பிறகு மழை வந்தது.

எட்டு வருடங்களாக மலடியாய்ப் போன வானத்தின் வயிற்றை வலுக் கட்டாயமாகக் கீறிக் கொண்டு ஒரு சமுத்திரமல்ல, மகா சமுத்திரமே கீழே குதித்தது.

பூமி ஒரு சிவலிங்கமாக அபிஷேகத்தில் மூழ்கியது.

மரங்களும் வீடுகளும் அதன் அடிப்பில் பிய்ந்து விழுந்தன. பாறைகள் நெக்கு விட்டு இடம் பெயர்ந்தன. கால்வாய்களும், சிறு நதிகளும் விம்மிப்போய் வழி தெரியாமல் சமவெளிகளில் எல்லாம் சீறி ஓடின.

பூமியெங்கும் தரையே தெரியவில்லை.

தண்ணீர்த் தகடு விரித்ததுபோல் எங்கும் ஒரே சமதளம் தெரிந்தது.

ஒரு நாள் இரு நாள் அல்ல, இருபது நாட்கள் விடாத மழை.

தினமும் பெரும் பெரும் மேகங்கள் பாய் மரங்கள் போல் பறந்து வந்தன.

பூமிக்கு நேரிடையாக நின்று ஒரு கறுத்த கர்ப்பமாகச் சூல் கொண்டன.

நான்கு திசைகளிலும் மின்னல்கள் சாட்டை அடித்தன.

பைசாசக் காற்று ஒன்று அவ்வப்போது தோன்றி, பொறுப்பில்லாத வெறியன் போல் மூர்க்கமாக ஓடியது.

எட்டு வருடங்களாக அடக்கி வைத்திருந்த இயற்கையின் சீற்றங்கள் திமிறென்று விடுபட்டது போல் போகும் வழியெல்லாம் பிள்ளையாட்டுத்தனமாய் நாசங்களை விளைவித்தது.

எங்கும் ஓ என்று பேரிரைச்சல்கள்.

குறுக்கும் நெடுக்குமாக ஓடும் நீரின் சோ என்ற பிரவாபங்கள்.

ரங்கநாதபுரம் என்ற அந்தக் கிராமம் ஏற்கனவே க்ஷாமத்தில் நலிந்திருந்தது.

இப்போது மழையும் அதைக் குற்றுயிராக்கி விட்டுச் செல்ல, ஒரு வயதான வீரன் போல் முடங்கி விட்டது.

அதன் தோப்புகளும், சோலைகளும் உடைந்து கிடந்தன. அதன் வயல்கள் எல்லாம் மேடிட்டு விட்டன. அதன் கால்வாய்களும் ஓடைகளும் தூர்ந்து விட்டன.

இருபது நாட்கள் கழிந்த பிறகு, காலையில் வானம் முதல் துளிர் வெளிச்சத்தைக் காட்டியபோது

அநேகமாய் உயிர் போயிருந்த கிராமம் மெள்ளச் சிலும்பிச் சுவாசம் விட்டது.

அதன் நான்கு தெருக்களிலும் உயிர் இலேசாக அரும்பியது.

ஊரின் புறத்தே உள்ள தண்ட நாயக மாளிகையில் அதிகாலையில் எழுந்திருந்த சுவர்ணமுகி,

தலையைச் சுற்றி முக்காடு கட்டிக்கொண்டு சிணுசிணுக்கும் சின்னத் தூற்றல்கள் ஊடே தொழுவத்துக்குச் சென்றாள். தூவானம் இன்னும் இருந்தது.

கையில் பொன்னாகத் துலக்கப்பட்ட பித்தளைச் சொம்பு மினுக்கல் காட்டியது.

தொழுவத்தில் வரிசையாக ஆறு லட்சுமிகள் குங்குமப் பொட்டுக்களுடன் நின்று கொண்டிருந்தன.

முக்காலியைத் தூக்கி முதல் பசுவின் முன்னால் போட்டு, கன்றுக்கு ஊட்டி, பால் கறக்க ஆரம்பித்ததும் மனம் அந்தப் பாலின் 'சொய்ய்ய்' இசையுடன் கலந்து எங்கேயோ போயிற்று.

அவளது துக்கமான வாழ்விலும் இடையிடையே வரும் சின்னஞ் சிறு இன்பங்கள் இவை.



இந்தத் தண்டநாயகர் வீட்டுக்கு வந்ததிலிருந்து அடிமை வாழ்வு தொடங்கி விட்டது.

காலையிலிருந்து மாலைவரை வேலை. இடையறாத வீட்டு வேலை. சமையல் செய்வதிலிருந்து தொழுவத்தின் பராமரிப்பு வரை குறுக்கு உடையும் கடின வேலைகள்.

இடையே அந்த ராட்சசி கிருஷ்ணவேணி கூப்பாடு போட்டுப் புதிய வேலை ஒன்றை ஏவிவிடுவாள்.

சிறிதும் சுணங்காமல் செய்ய வேண்டும்.

நாழிகை பிசகினாலும் வசவுகள் சாடிவரும். சமயத்தில் முதுகில்கூட அவளுடைய இரும்புக் கை தொம் என்று விழும்.

வாழ்க்கை எப்படி நாராசமாகி விட்டது!

ஒரு அரச பரம்பரையில் பிறந்த பெண்ணுக்கு இவ்வளவு கஷ்டங்கள் வருமா?

கதையில் கூடக் கேட்டதில்லை.

ஒரு அடிமையிலும் கேவலமாக வாழ வேண்டி இருக்கிறது.

'அம்மா' என்று மனம் முனகியது.

அம்மாவைச் சரியாகப் பார்த்ததில்லை— அப்பாவையும்தான்!

இரண்டு பேரையும் சிறையில் வைத்திருந்தார்கள் என்று மட்டும் தெரியும்.

அப்பாவுக்கு ஒரு ஆசை! தனது பரம்பரை எப்படியும் நிலைக்க வேண்டும் என்று.

இதனால் அண்ணன் ராமதேவனே ஒரு சலவைத் தொழிலாளியின் கூடையில் ஒளித்து வைத்துச் சிறைக்கு வெளியே அனுப்பி விட்டார்.

அதன் பின்னர் ஒரு வயதுக் குழந்தையான அவளைச் சிறைக் காவலாளி ஒருவன் கையில் கொடுத்து, பதிலாக அவனது குழந்தையை வாங்கிச் சிறைக்குள்ளே வைத்துக் கொண்டார்.

ஆக காவலாளியும் அவனது மனைவியும் தான் அவளுக்கு ஆரம்பப் பெற்றோர்கள்.

பின்னர் சிறிது காலத்தில் ரங்கப்பாவின் கைக்கு மாற....

அப்பா! எத்தனை கஷ்டமான கட்டங்களைக் கடந்து அவள் வந்து விட்டாள்!

அப்படியும் அவள் துயரங்கள் முடிந்து விட்டதாகத் தெரியவில்லையே!

இங்கே இந்தக் கிருஷ்ணவேணியிடம் அகப்பட்டுக் கொண்டு...

இவள் யார் தெரியவில்லையே!

மாளிகை ஆடம்பரங்களைப் பார்த்தால் நிச்சயம் தேவதாசியாகத்தான் இருக்கும்.

இவர்களுக்குத்தான் எவ்வளவு செல்வங்கள்!



மன்னருக்கு அடுத்தபடி செழிப்பாக வாழ்கிறார்கள் இவர்கள்.

இந்தக் கிருஷ்ணவேணியிடம் ஏன் ரத்னுவளி அவளை ஒப்படைத்திருக்கிறான்?

இவளிடம் விலைக்கு விற்று விட்டாளா?

அல்லது வேறு ஏதாவது நோக்கத்துடன் இங்கே அவளைக் கொண்டு வந்திருக்கிறார்களா?

ஒன்று புரிந்தது.

பல முறை அவளை, 'நீதான் சுவர்ணமுகியா சொல்லு, சொல்லு!' என்று அரித்து எடுத்திருக்கிறார்கள். அவள் சொன்னதில்லை! அவள் ஒரு மலை ஜாதிப் பெண் என்றே திரும்பத் திரும்பத் தன்னைச் சொல்லிக் கொண்டாள்.

உண்மையை வரவழைக்க வேண்டி அவளை எவ்வளவு சித்திரவதை செய்தார்கள்! எவ்வளவு கொடுமைப்படுத்தினார்கள்! எத்தனையோ முறை பட்டினி போட்டார்கள்!

எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டு பல்லைக் கடித்து இருந்து விட்டாள்.

இப்போது இந்தத் துன்பமான அடிமை வாழ்வு இன்னும் நீடித்துக் கொண்டேபோகும் போது, மனம் திறந்து அவள் யார் என்று சொல்லிவிடலாம் போல இருந்தது.

சொன்னால் என்ன ஆபத்தோ!

ஒரு அரச பரம்பரையும், அதன் பழைய பொக்கிஷத்தின் ரகசியமும் அவள் மூலம் கிடைக்கும்போது சும்மா விடுவார்களா?

என்ன ஆனாலும் பரவாயில்லை. அவள் தனது உண்மைகளை வெளிப்படுத்தப் போவதில்லை.

உள்ளே இருந்து, ''ஏ சனியனே!'' என்று குரல் கேட்டதும், பால் சொம்போடு எழுந்திருந்தாள்.

கிருஷ்ணவேணி சிடுசிடுவாக வந்தாள்.

''பால் கறக்க எத்தனை நாழி?''

சுவர்ணமுகி குனிந்து கொண்டே செம்பை உள்ளே போய் வைத்தாள்.

திரும்பிக் கிணற்றடிக்கு வந்தாள். உள்ளே தண்ணீர் கொண்டு போக வேண்டும்.

ராட்டையைப் போட்டுக் குடத்தை இழுக்கும்போது டக்டக் டக்டக் என்ற ஓலங்கள் வர,

அவள் நினைவு ஒவ்வொரு முறையும் அந்தக் குதிரை வீரனை நோக்கிச் சென்றது.




'அவர் வருவாரா?'

நினைக்கும்போதுகூடச் சின்ன உவகை தளிர்த்தது.

அவரை உயிருடன் கிடைக்கப் பெற்றதே வரப்பிரசாதம்! அந்தச் சந்தோஷத்தில் திளைத்திருக்கும்போது ஒரே ஒரு இரவுக்குள் மீண்டும் அவரைப் பறிகொடுத்தோமே!

எவ்வளவு அதிர்ஷ்டமில்லாதவள் அவள்! போது விடிவதற்குள் கிங்கிரர்கள் போல் அந்தப் பட்டாளம் ஏன் காட்டுக்குள் வர வேண்டும்? நரசய்யாவின் படை என்றார்கள். பின்னர் பார்த்தால் ரத்னுவளியின் 'யூகம்' (சொந்தப்படை)என்றுதெரிந்தது. அவளையும் செல்லியையும் சிறைப் பிடித்துப் போக.... அப்போதாவது அவர் (அர்ச்சுனன்) எதிர்ப்பட்டு அவளது துரதிர்ஷ்டத்தை அதிர்ஷ்டமாக மாற்றியிருக்கக் கூடாதா?

அவர் எப்போது வந்தாரோ! எங்கெங்கே தேடினாரோ!

எவ்வளவு மனம் நொந்திருப்பார் அவர்!

இப்போது கூட அவர் தேடிக் கொண்டிருப்பார் இல்லையா?

ஆமாம், நிச்சயம் தேடிக் கொண்டிருப்பார்!

அவளால் அந்த இரவின் துளிப் பொழுதில் கூட அவரது கண்களை வாசிக்க முடிந்ததே!

அதில், அவள் மீது அவர் கொண்டிருந்த பரிச்சயத்தின்நெருக்கம்நன்றாகத் தெரிந்ததே!

அவளைப் பார்த்ததும் எப்படிப் பிரமை அடித்து நின்றார் அவர்!

சொல்லமுடியாமல், பேசமுடியாமல், காலையும் கையையும் வெடவெடத்துக் கொண்டு... சிரிப்புக்கூட வந்தது. பாவம்! அந்த இடத்திலேயே அவரைத் தவிக்க விடாமல், ''நான்தான் சுவர்ணமுகி'' என்று சொல்லியிருக்கக் கூடாதா?

அவளை எவ்வளவு தூரம் தவிக்க வைத்து.

அப்புறம் கூடத் தாராளமாகப் பேசாமல் அந்தப்புரத்துத் திரைக்குள்ளிருந்து பேசுவது போல் ஒரு வார்த்தை இரண்டு வார்த்தை மட்டும் உதிர்த்து...சீ! ஏன் அப்படிச் செய்தாள் அவள்!

இனிமேல் வந்தால் சரளமாகப் பேசவேண்டும். தட்டுத் தடங்கல் எதுவும் வைத்துக் கொள்ளக் கூடாது! ஆமாம்!

வருவாரா?

நீரைப் பெரிய வாளியில் சரித்து, குடத்தைத் தூக்கி இடுப்பில் வைத்ததும்,

இன்னும் அந்த டக்டக் சத்தம் கேட்டது. திடுக்கிட்டு ராட்டையைப் பார்த்தாள். ராட்டை அப்படியேதான் இருந்தது.

பின்னே, எங்கிருந்து சத்தம் வருகிறது?

வாசலை நோக்கித் திரும்ப,

அவள் கண்கள் ஒரு கணம் விசாலமாகிப் பிறகு குறுகிப் போயின.

அதே ஆள்தான் வந்து கொண்டிருந்தான். பலமுறை பார்த்த ஸ்ரீரங்கன்!

அவனைக் கண்டால் அவளுக்கு அவ்வளவாகப் பிடிப்பதில்லை.

அவளிடம் வந்து தாராளமாகப் பேசுகிறான், என்ன காரணம் என்று தெரியவில்லை. ஏதாவது கெட்ட நோக்கு இருக்குமோ என்று நினைத்திருக்கிறாள். பிறகு அவன் நடை உடையிலிருந்து அப்படிப்பட்டவன் இல்லை என்று

## உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...




### செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

# ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 4. TM

கனித்திருக்கிறான். ரொம்ப கண்ணிய மாகப் பேசினான். ஒதுங்கியே நின்றான். அவ னுக்கு நிறைய மரியாதை கொடுத்தான்.

ஒரு வேளை, இதெல்லாம் அவள் ஒரு அரச குமாரியா என்பதைத் தெரிந்து கொள் வதற்காக இருக்குமோ?

குடத்தையும் வாளியையும் உள்ளே கொண்டு போய் வைத்தாள்.

கிருஷ்ணவேணியின் விழுந்த துணிகளை எடுத்துக்கொண்டு கிணற்றடிக்கு மீண்டும் வந் தாள். துணிகளை நனைத்து நிமிரும்போது பளீர் என சூரிய வெளிச்சம் கிணற்றைத் தழுவி யிருந்தது.

வெகு நாட்களுக்குப் பின் முதன் முதலாக வந்த வெளிச்சம்.

அது தந்த வெம்மையில் மனம் சற்று மினிர கனைக்கும் குரல் கேட்டு அவள் திரும்பினாள்,

ஸ்ரீரங்கன் சிறிது தள்ளி விநயம்காட்டி நின் றான். ''இன்னும் காரியம் முடியவில்லையா?'' என்றான் மெல்லிய குரலில்.

அழகான இளைஞன். அடர்த்தியான புரு வம், திடகாத்திரமான உடம்பு. கண்களில் மட்டும் எப்போதும் ஒரு பக்தனுக்கு இருப் பதைப் போன்ற கனிவு. அவைகளைப் பார்த் தாலே அவனை நம்பலாம் போல இருக்கும்.'

''ம்'' என்று தலையைக் குனிந்தாள் அவள்.

''இத்தனை நாளும் மழை! என்னாலே வரமுடியாமல்போயிடுத்து!''என்றான் அவன்.

அவள் பேசவில்லை.

''மழை வந்தது எல்லாருக்கும்சந்தோஷம். குடி படைங்க எல்லாம் மகிழ்ச்சியா இருக் காங்க. இது நாட்டுக்கு ஒரு நல்ல அறிகுறி!''

அதற்கும் அவள் பேசவில்லை.

''மழையிலே நீங்க எப்படி இருந்தீர்கள்? வீட்டில் சௌகரியமாக இருந்ததா?'' என்று தொடர்ந்தான் அவன்.

அவளுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. ஏதோ சொல்ல வாயெடுத்தவள் வீட்டு உட்புறம் நோக்கித் திரும்பினாள்.

''கிருஷ்ணவேணி வெளியே போயிருக் காங்க. நீங்க தைரியமாப் பேசலாம்'' என் றான் அவன்.

இப்போது அவள் ஆத்திரம் இன்னும் பற்றிக் கொண்டது.

''ஐயா!'' என்று கடுமையாக விளித்தாள் அவள். கண் இரண்டும் ஜுவாலை இட்டது. ''உங்க அக்கான்னு சொல்றீங்களே! அவள் ஒரு ராட்சசி! கொடுமைக்காரி! இந்த வீட்டில் எங்களை என்ன கொடுமையாக நடத் தறா தெரியுமா? எவ்வளவோ பொறுத்துப் பார்த்தேன். இன்னும் கொஞ்ச நாள்தான்! அதற்கு மேலே என்னைக் கொடுமை பண் ணினா ஒரே வழி இந்தக் கிணத்துக்குள்ளார விழுந்துடுவேன்'' என்றாள் அழுத்தமாக.

வார்த்தைகளை வீசி எறிந்து விட்டு அவ னைப் பார்க்க, அவன் அதன் கடுமைகளைக் கண்டு நடுங்குவது தெரிந்தது.

கண்களில் ஒரு இரக்கம் பீறி அடித்து வந்தது. அந்த நொடியில் அவனை நம்பலாம் போன்று ஒரு அடைக்கல உணர்வு அவளிடம் தோன்றியது.

''தயவு செய்து கேளுங்கள்! அப்படி எதுவும் செய்ய மாட்டீர்களே! எனக்கு சபதம் அளித்துக் கொடுங்கள். இல்லா விட்டால் என்னால் இரவு உறங்க முடியாது'' என்று கூறினான் அவன். குரல் நடுங்கியது.

அவள் அவனை அர்த்தமுடன் பார்க்க, அவன் தொடர்ந்தான். ''ஏன் உங்கள் மீது அவ்வளவு கரிசனம் என்று கேட்பீர்கள்! என் னால் அதை அறிந்து கொள்ள முடியவில்லை. உங்களைப் பார்த்ததும் எனக்கு இரக்கமும் பரிவும் மட்டும் வரவில்லை. ஒரு ராஜ பக்தி கூட வருகிறது'' என்றான்.

''ராஜபக்தி?'' என்று தெரியாதவள்போல் விழித்தாள் அவள்.

''ஆமாம். ஒரு அரசனிடம் மக்கள் செலுத்தும் அன்பு! நான் .சொல்வதைத் தயவு செய்து கேளுங்கள். ரத்னாவளி என்னை உங்களிடம் அனுப்பித்தது ஒரு துர் நோக் கத்திற்காக. ஆனால் அதற்கு நான் உடன்பட வில்லை. ஏனெனில் தங்கள் முகம் என்னை ஒரு நன்னடத்தையிலேயே நடக்க வேண்டும்என்று உத்தரவு போடுகிறது. அதற்குக் காரணம் அறியேன். உங்களைப் பொறுத்த வரையில் என்னால் உண்மை தவிர வேறு எதுவும் பேச முடியாது'' என்றான் அவன்.

அவன் கூறுவதைப் பார்த்தால் அந்தத் தொனியில் சத்தியம் இருப்பது போல் தோன் றியது.

இவனை நம்பலாமா?

ரத்னாவளி துர்நோக்கம் வைத்திருக்கிறாள் என்கிறானே! அது என்ன துர் நோக்கம்?

இவன் முகத்தைப் பார்த்தால் , இவன் என் வசீகரத்தில் மனம் கலங்கிவிட்டான் என்று தெரிகிறது.

இதையே வைத்து சாகசம் செய்து இவன் உதவியால் வெளியே தப்பித்து விடலாமா?

அப்படிச் செய்தால்தான் என்ன?

முதல் புடவையை வெளியே தண்ணீ ருடன் போட்ட அவள், நிமிர்ந்து அவனைச் சற்று ஆழமாகப் பார்த்தாள்.

அவளது கரிய விழிகள் பட்டதும் அவன் உடம்பே தத்தளித்தது.

அவன் பார்வை அவள் கண்களைத் தாங் காமல் கீழே குனிந்தது.

''ம்'' என்று தொடங்கி மேலே போனாள் அவள். ''என்னமோ ரத்னாவளிக்குத் துர்நோக் கம்னு சொன்னீங்களே அது என்ன?'' என் றாள் அழுத்தத்தோடு. (தொடரும்)

# அன்பளிப்பு

## சில்பி யின் தெய்வச் சித்திரங்கள் 6

புனிதத் திருத்தலங்களில் அருள்பாலிக்கும் தெய்வத் திரு உருவங்கள்.* காஞ்சிப் பெரியவர் ஆசிபெற்ற 'சில்பி' வரைந்துள்ள ஓவியங்கள். பல வண்ணங்களில் ஆர்ட் காகிதத்தில் அச்சிடப்பட்டவை. பூஜை அறையில் நாள்தோறும் போற்றி வணங்குவதற்கு உகந்தவை.



**புதிய டெபாஸிட் செய்பவர்களுக்கும் அறிமுகம் செய்பவர்களுக்கும் ஸ்ரீராம் வழங்கும் அன்பளிப்பு.**

நீங்கள் டெபாஸிட் செய்யும் ஒவ்வொரு ரூ. 5000க்கும், இந்த அன்பளிப்பு உண்டு. (அறிமுகம் செய்வோர், ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் ஃபைனான்ஸ் கம்பெனி லிட்., ஸ்ரீராம் சிட்ஸ், ஸ்ரீராம் ஃபைனான்ஸ், ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஏதேனும் ஒன்றில் அங்கத்தினராக இருக்கவேண்டும்.) நீங்கள் விரும்பினால், உங்களுக்கு உரிய அன்பளிப்பை இந்தியாவில் எந்த விலாசத்திற்கும், எங்கள் செலவில் பதிவு தபாலில் அனுப்பி வைக்கிறோம். (வெளிநாடுகளுக்கு விமான தபால் கட்டணம் தனி)

1. கவர்ச்சி மிகு வட்டி:

| வட்டி விகிதம் / டெபாஸிட் காலம் | மாதாமாதம் வட்டி பெற | 6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி பெற | மறு முதலீட்டுத் திட்டத்தில் மொத்தமாக வட்டி பெற |
|---|---|---|---|
| 1 ஆண்டு | 14.0% | 15.0% | 15.5% |
| 2 ஆண்டுகள் | 14.5% | 16.0% | 17.5% |
| 3 ஆண்டுகள் | 15.0% | 17.0% | 20.0% |

2. மறு முதலீட்டுத் திட்டம்

இத்திட்டத்தில் (Re-investment plan) உங்களது ரூ. 3,125, மூன்றே ஆண்டுகளில் ரூ. 5,000 ஆக வளர்கிறது. இதில் டெபாஸிட் செய்வோர்க்கும் இவ்வன்பளிப்பு உண்டு. உங்களை அறிமுகம் செய்பவரும் இந்த அன்பளிப்புப் பெறலாம்.

3. நம்பிக்கை—நாணயம்—அநுபவம்—உங்கள் டெபாஸிட்டிற்கு உத்திரவாதம்

ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் நிறுவனம் பதிவு செய்யப் பெற்ற பார்ட்னர்ஷிப் (Registered Partnership) நிறுவனம். இந்த நிறுவனம் மோட்டார் வாகனங்களைத் தவணை முறையில் வாங்குபவர்களுக்குக் கடன் உதவி செய்கிறது. இத்துறையில் பதினைந்து வருட அனுபவமும் திறமையும் மிக்கவர்களால் நிர்வகிக்கப்படுகிறது.

ADWAVE/SI/1724

* 1. ஸ்ரீ குருவாயூரப்பன். 2. ஸ்ரீ முருகன், திருப்பரங்குன்றம். 3. ஸ்ரீ பங்காரு காமாட்சி, தஞ்சாவூர். 4. ஸ்ரீராமர், பத்ராசலம். 5. ஸ்ரீ கோமதி அம்மன், சங்கரன்கோவில். 6. ஸ்ரீ அபிராமி அம்மன், திருக்கடையூர். (அளவு: 23 செ.மீ x 19 செ.மீ.)




## ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

தலைமை அலுவலகம்: 123, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை 600 001. போன்: 28545/37890/21425.

கிளை அலுவலகம்: 54, வடக்கு உஸ்மான் சாலை, தி. நகர், சென்னை 600 017. போன்: 441074 (செவ்வாய் விடுமுறை)

பெங்களூர் கிளை: செல்லர் ஃபிளோர், பிரவுனம்மா டவர், 70/1, [illegible] ரோடு. பெங்களூர் 560 027. போன்: 27006.



# நீயா

சந்திரநாத்

## 13

மகேஷ் அவசரமாக, நாலுகால் பிராணியாக எழுந்து, அவசரமாக பாண்ட் பாக்கெட்டிலிருந்து ரிவால்வரை உருவி, அவசரமாகக் குழந்தை போல் தவழ்ந்து அறைக்கு வெளியே வந்தான்... நிமிர்ந்தான்.

அந்த நீண்ட தாழ்வாரத்தின் பாதி தூரத்தில் கறுப்பாக,, ஸ்லிம்மாக ஒரு ஆள் ஓடிக் கொண்டிருப்பது தெரிந்தது. 'சட்' டென்று ஓட்டத்தை நிறுத்தி திரும்பி, இன்னொரு தடவை சுட்டான்—

தப்பிப் போகிற குற்றவாளி, சிறிது தூரம் ஓடினதும், பிடிக்க வருபவர்களைத் தடுத்து நிறுத்தச் சுடுவது வழக்கம்தானே. இதை எதிர்பார்த்து, தரையோடு படுத்து அந்தத் தாக்குதலை முறியடித்து, பின் எழுந்த போது—

கறுப்பு ஸ்லிம் தாழ்வாரத்தின் மறு கோடியில் படிக்கட்டுக்களில் இறங்கி, விநாடிகளில் பூமியில் மறைய ஆரம்பிக்க—

மகேஷ் சுட்டான். அரை விநாடியில் மாடிப் படிகளில் அந்த ஆள் தோளைப் பிடித்துக்கொண்டு சுழல்வதும், அடுத்த விநாடிகளில் கீழே சரிந்து பக்கவாட்டில் சாய்வதும் தெரிந்தது.

மகேஷ் ஓடி படிகளின் மேலே வந்து எட்டிப் பார்த்தபோது கடைசிப் படியில் கறுப்பன் எழுந்து துப்பாக்கியை எடுத்து, உயர்த்தி, மேல் படியில் நிற்கிறவனைப் பார்த்துச் சுட முயல்வது தெரிந்தது.

மகேஷ் ஒரு டைவ் அடித்து அவன் மீது விழுந்து, துப்பாக்கி முயற்சியைத் தோல்வி காணச் செய்தான். கறுப்பன் சீரைத் தண்டாய்த் துவண்டு, "ஐயோ, செத்தேன்" என்று உரக்கவே கூறி வாய் கோண—

மகேஷ் தொட்டு, பனியனோடு பிடித்துத் தூக்கி, "இல்லை— இன்னும் உயிரோடுதான் இருக்கிறாய்" என்று முகத்தைப் பார்க்க—

அது ராமு—

கங்குலியின் ஆள்!

தோள்பட்டையில் காயம் ஆழமாக இல்லை. சொய்த்து ரத்தத்தை உமிழ்ந்திருந்தது. அதிர்ச்சி அடியில் காலை விரித்து விகாரமாகக் கிடந்தான்.

'பையா, ஏன் கொல்ல வந்தாய் என்னை? யார் அனுப்பினார்கள் உன்னை? கங்குலியா?'

கதவைச் சாத்தி வெளிப்புறம் தாளிட்டு ... லாபிக்குப் போய், அந்த அழகிக்குப் ... சிரித்து மரியாதை செலுத்தி ...ராக் கூப்பிட்டான்.

பத்து நிமிஷத்துக்குள் வந்தார்கள். "என்னய்யா, குற்றவாளியைக் கண்டுபிடித்துவிட்டீரா?" என்று வந்தார் அதிகாரி.

"இல்லை ஸார், என்னைச் சுட வந்த ஒரு ஆளைத்தான் பிடித்து வைத்திருக்கிறேன்" என்று காட்டினான். மாடிப் படி ஸைட் அறைக்குள் போனபோது அவன் எழுந்து உட்கார முயல்வது தெரிந்தது. பிடித்துப் போனார்கள்.

அறைக்கு வந்தபோது நிம்மி காத்திருந்தாள்.

"என்ன ஆச்சு?" என்றாள் பீதியுடன்.

"போலீஸ் பிடிச்சுக்கிட்டுப் போயிடுச்சு."

முகத்தில் கலவரத்தைப் படர விட்டாள். "உனக்கு ஒண்ணும் இல்லையே."

"இல்லை. நான்தான் உங்க குரல் கேட்டதும் கீழே படுத்துக் கொண்டு விட்டேனே."

"இருங்க, ஒரு நிமிஷம்" என்று ரூம் போனை எடுத்துக் கங்குலியின் 'பா'ரை'க் கூப்பிட்டான். கங்குலியே எடுத்தார். "ஹலோ" என்றார்.

"நான் மகேஷ் பேசுகிறேன்."

"ஓ, மகேஷ் — நீயா?"

"நிச்சயமாக என் ஆவியில்லை. என் ஜாதகம் ரொம்பக் கெட்டி, மிஸ்டர் கங்குலி. நீ, துப்பாக்கிக் குண்டு எதுவுமே என்னை எண்பத்தைந்து வயது வரை தீண்டாது."

"என்னப்பா சொல்றே?"

"உங்க ஆள் சற்று முன் என் அறைக்கு வந்தான். என்னைச் சுட்டான். இரண்டு ரவை வேஸ்ட்."

"என்ன?" — அதிர்ந்தார் கங்குலி.

"நீங்கள் கவலைப்பட்டுக்கிட்டு இருப்பீங்களேன்னுதான் கூப்பிட்டுச் சொன்னேன். அவனைப் பத்தி மேலே நியூஸ் வேணுமென்றால் நீங்க 'கிங்ஸ்' ஆஸ்பத்திரிக்கு போன் பண்ணணும்."

"என்ன சொல்கிறாய் மகேஷ். எனக்கு ஒண்ணும் புரியலையே."

"எனக்குக் கூடத்தான் ஏதும் புரிய மாட்டேன் என்கிறது.... ஆனால் ஒண்ணு... மிஸ்டர் கங்குலி... இந்த மாதிரி அரை வேக்காட்டுப் பயல்களை யெல்லாம் இனிமே நீங்க நம்பிப் பிரயோஜனமில்லே— அடுத்த தடவை நீங்களே வருவதுதான் நல்லது—"

"நீ நினைப்பது தப்பு மகேஷ்... எனக்கு இதிலே சம்பந்தமே இல்லை... நிஜமாகவே."

'டக்'கென்று ரிசீவரை வைத்துவிட்டுத் திரும்பி வந்தான்.

"என்ன உடம்பு இன்னும் பதறுது.."

"இப்படி ஒண்ணு நடந்தா பயமா இருக்காதா?" என்றாள் நிம்மி.

"இதெல்லாம் சகஜம். லைஃப் முழுக்க நாங்க திருடன்களோடவும் கொலைகாரன்களோடவும் துப்பாக்கியோடவும்தான் பழகிக்கிட்டிருக்கோம்."

"எனக்கு சத்தமா யாராவது பேசினாக்கூட நடுங்கிடும்."

"அப்ப கமல்நாத் செத்துட்டாருன்னு கேட்டதும் நடுங்கிப் போயிருப்பீங்க."

"மயக்கமே வந்துடுச்சுங்க" என்றாள் நிர்மலா.

"அவரு மதுரைக்குப் பெரிய தொகை ஏதாவது எடுத்துக்கிட்டு வந்தாரான்னு தெரியாதுன்னீங்களே?"

''ஆமா!'' — யோசித்து நீட்டினான்.

''சரி, நேற்று முந்தாநாள் பெரிய தொகை ஏதாவது அவர் மெட்ராஸ்லே பாங்க்லே 'ட்ரா' பண்ணுனரா — அதாவது தெரியுமா?''

யோசித்தான். ''ஆமாங்க'' என்றான்.

''எவ்வளவு?''

''கரெக்டாத் தெரியாது. பெரிய நோட்டுக்களா அஞ்சாறு கட்டு மேஜை மேலே வைச்சுக்கிட்டிருந்தாரு.''

''நீ பார்த்தாயா?''

''பா....ர்....த்....தே....ன்...'' — தடுமாறினான்.

''அஞ்சாறு கட்டுன்னு நூறு நூறாக் கட்டினதா?''

''ஆமா.''

''அப்ப பெரிய கட்டாக இருக்குமே.''

''அப்படித்தான் இருந்துச்சு.''

''நிர்மலா—உங்க ஸ்டேட்மெண்ட் உதைக்குதே. நூறு ரூபாய் நோட்டுக்களாக ஒரு கட்டு இருந்தால் அதுவே பத்தாயிரம் ஆகிவிடுமே — நீங்க அஞ்சாறு கட்டுக்களைப் பார்த்ததாச் சொல்றீங்களே?''

''நான் சரியாகப் பார்க்கலே'' என்றாள் நிர்மலா.

கொட்டாவி விட்டாள். ''தூக்கம் வருதா?''

''ஆமா.''

''எங்கே தங்கப் போறே?''

''நான் இன்னிக்கு மெட்ராஸ் திரும்பிடறதா இருந்தேன்.''

''இனிமே ரயில் இல்லே. பஸ் சரிப்படாது. நான் போய் ஹோட்டல் மானேஜரைப் பார்த்து ரூம் ஏதாவது இருக்கிறதா என்று தெரிஞ்சுக்கிட்டு வர்றேன்.''

போனான். டெலிபோனிலேயே கேட்டிருக்கலாம். நிம்மி பற்றிச் சிந்திக்க விரும்பினான். படிகளில் சிந்தித்தான். இவள் எதற்காகப் பதறி அடித்துக் கொண்டு வந்தாள்? 'தொகை பற்றி இவள் சொல்வதிலே எத்தனை சதம் உண்மை? இவள் நோக்கம் என்ன?

கீழே அந்த 'இளபகம்' இல்லே. மானேஜர் இல்லே. ஒரு கரடித் தலையன் உட்கார்ந்து நிர்தாட்சண்யமாக 'அறை இல்லே' என்றான்.

திரும்பினான். ''மிஸ்டர்'' என்ற குரல் கேட்டது.

திரும்பினான். ''மகேஷ், நான்தான் மோகன்.''

மப்டியில் சிரித்தான். ''கொஞ்சம் வருகிறாயா, என்னோடு?''

''எங்கே?''

''போலீஸ் ஸ்டேஷனுக்கு. — இன்ஸ்பெக்டர் கோபால் காத்துக் கொண்டிருக்கிறார்.''

மகேஷ் எரிந்து விழுந்தான். ''போலீஸ்காரர்கள் தூங்கவே மாட்டார்களா?''

''நாங்கள் தூங்கிவிட்டால் உன்போன்ற சந்தேகாஸ்பதப் பறவைகள் சுலபமாகத் தப்பித்துவிடுமே அப்பா!'' — சிரித்தான் மோகன்.

''உம்'' என்று உறுமிவிட்டு, அங்கிருந்தே மேலே 'அறையை'க் கூப்பிட்டு ''நிம்மி, நான் ஒரு காரியமா வெளியே போறேன். வரவரை என் ரூம்லேயே இருக்கியா?'' என்றான்.

''சீக்கிரம் வந்துவிடு மகேஷ். எனக்குப் பயமாக இருக்கிறது.''

மோகனுடன் போனான். தெருவில் நடமாட்டம் குறையத் தொடங்கி விட்டது. நகரம் அசாதாரண மௌனத்தைப் போர்த்திக்கொள்ள ஆரம்பித்து விட்டது.



பிரகாசமான மேஜை விளக்கினடியில் இன்ஸ்பெக்டர் கோபாலன், கழுகுக் கண்களுடன் உட்கார்ந்து இவனைப் பார்த்தார். ''எஸ். ஸிட்டௌன்'' என்றார். மகேஷ் உட்கார்ந்தான்.

நேரடியாக விஷயத்துக்கு வந்தார். ''சரி, சொல்லு: பார் கடை ஆள் ராமு உன்னை ஏன் சுட்டான்.?''

''எனக்கெப்படித் தெரியும்?''

''மழுப்பாதே பிரதர்... உன் மெட்ராஸ் வேலை யெல்லாம் நம்ப கிட்டே நடக்காது. நான் எப்படியும் உண்மையைக் கண்டுபிடித்து விடுவேன்.''

''இப்படித்தான் எல்லா இன்ஸ்பெக்டர்களும் எல்லாக் கேஸ்களிலும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.''— மகேஷ் சிரித்தான்.

''ஐ யாம் டிபரண்ட்....''

''நான் போகலாமா?'' எழுந்தான்.

''இரு. கொஞ்சம்'' என்றார். ''கமல் கொலை விஷயத்தில் என்ன கண்டு பிடித்திருக்கிறாய்?'' என்றார்.

''ஒன்றுமில்லை.''

''மறைக்காதே மகேஷ் — நான் கண்டு பிடித்து விடுவேன்.''

''கண்டு பிடியுங்களேன் சார்—'' சிரித்தான்.

''ஒரே ஒரு கேள்விக்குப் பதில் சொல்— கண்டு பிடித்து விடுகிறேன்.''

''கேளுங்கள்.''

''கமல்நாத்தின் 'கான்குபைன்' உன் அறையில் என்னசெய்து கொண்டிருக்கிறாள்?''

அதிர்ந்தான். ''கான்குபைனா'' என்றான். ''அந்தரங்கக் காரியதரிசி என்றானே!''

''அந்தரங்கக் காரியங்களைக் கவனிக்கிறவளாக இருக்கலாமே'' அவரும் சிரித்தார். ''கான்குபைனுக்கு நாகரிகப் பெயர் அது தானே?''

''அவளைச் சந்தேகிக்கிறீர்களா?''

''நாங்கள் எல்லோரையுமே சந்தேகிக்க வேண்டுமப்பா'' என்றார்.

''என்ன சொன்னாள் நிம்மி?'' யோசித்தான். இவர் உதவியும் நமக்குத் தேவைப் படலாம்.

எல்லாவற்றையும் சொன்னான். கேட்டுக் கொண்டார், கவனமாக.

''ஸோ — இந்தக் கங்குலி மீது குற்றம் சாட்டுகிறாளா?'' என்றார்.

''குற்றம் சாட்டுகிற மாதிரி சொல்லவில்லை.''

''பொம்பளை ஐயா — டைரக்டா சொல்லுவாளா? 'கோடி' காட்டுவாள். நாம் போய் லபக்கென்று பிடித்துக் கொள்ள வேண்டும்.''

''பிடித்துவிடப் போகிறீர்களா?''

''நோ எவிடென்ஸ் — பணம் ஒரு இலட்சத்தைப் பிடுங்கிக் கொண்டு கொன்று போட்டுவிட்டுப் போயிருந்தால், போய்ப் பிடித்து விடுவேன். தெள... இட்ஸ் இம்பாஸிபிள்... கங்குலி கிட்ட கமல்நாத் பணம் இல்லை.''

''பின்னே எங்கே போயிற்று அது? நிச்சயமாக ஒரு லட்சம் கொண்டு வந்திருக்கிறார், கமல். அது என்ன ஆயிற்று?''

''எங்களுக்குத் தெரியும். அது எங்களிடம் வந்து விட்டது.''

''ஓ! என்ன சொல்கிறீர்கள் கோபாலன்?''

''எரிந்த பணத்தை நாங்க கைப்பற்றினோம். அதனோடே இடுப்பு பெல்ட்லே. சீக்ரெட் அறையிலே கற்றை கற்றையாக எரிந்து கிடந்தது. நிச்சயமாக இண்டியன் கரன்ஸிதான். நோ டவுட். எடுத்து ரசாயனப் பரிசோதனைக்கு அனுப்பி வைச்சிருக்கோம்.''

''ஐ ஸீ'' என்றான். ''எரிந்தது அவர் பணமாக இருந்தால், இறந்திருப்பதும் அவர் தான்.''

''இறந்தது கமல்நாத்தாக இல்லாமலும் இருக்கலாமே என்று நானும் கொஞ்சம் சந்தேகப்பட்டேன் மகேஷ். ஆனால் தலை மறைவாகப் போக விரும்புகிற ஒரு ஆள் தன் பணத்தை ஒரு பெரிய தொகையையும் ஏன் வீணாக எரிக்க வேண்டும்? கங்குலிக்குத் தான் இறந்துவிட்டதாகக் காட்ட விரும்பினால் பணத்தையும் எரித்து வீணாக்க வேண்டியதில்லையே'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''ஸோ, இறந்தது கமல்நாத்தான்.''

''ஆமாம்.''

''அப்படியானால் கொன்றவன் யார்? கங்குலியா?''

''அங்கேயும் உதைக்கிறது மகேஷ். அன்றிரவு கமலைப் பார்க்க வந்த ஆள் கங்குலியாக இருந்தால் — அவன்தான் அவரைக் கொன்றான் என்றால் — தீயிடுவதற்கு முன் பணம் முழுவதையும் எடுத்துக் கொண்டல்லவா தீயிட்டிருப்பான்?''

''ஓ'' என்றான் மகேஷ்.

கோபாலன் எழுந்தார். ''பணத்தைக் கொடுப்பதற்குத்தான் கமல் வந்திருக்கிறார். மறுநாள் நிச்சயமாகக் கொடுத்திருப்பார். எளிதில் விவகாரம் முடிந்திருக்கும். இப்படி நிலைமை இருக்கையில், இரவே வந்து கங்குலி ஏன் கையைக் கறையாக்கிக்கொள்ள வேண்டும்?''

யோசிக்க வேண்டிய விஷயம்தான்.

''டீ சாப்பிடுகிறாயா?''

''நோ, தாங்க்ஸ்'' என்றான்.

''இரண்டு விஷயம் நிச்சயம். மனசில் குறித்துக்கொள். இறந்தவர் கமல்நாத்தே தான். கொன்றவனும் கங்குலி இல்லை. இந்த இரண்டும் துல்லியமாகத் துலங்கிப் போன விஷயங்கள்.''

''பின்னே கொலையாளி யார்?''

''அந்த 13ம் நம்பர் அறைக் கட்டில்தான் சொல்ல வேண்டும்!'' (தொடரும்)

---

**''என்னதான் முன்ஜாக்கிரதைக்காரரானாலும் அவர் இப்படி இருக்க வேணும்... பாரேன்...''**

**''குற்றாலத்துக்கு வந்து அருவியிலே குளிக்கறதுக்கு ஹெல்மெட் போட்டுக்கறார்!''**

**-முத்துதங்க ஐயப்பன்**

# சிற்பக்கலைநயம்வாய்ந்த கிச்சிங்ஸ்வரா கோயில், ஒரிசா



அக்காலத்து கலைத்திறனை இக் கோயிலின் கற்கள் பேசுகின்றன. பூ வேலைப்பாடுகளும், வடிவமைப்புகளும், அதிநுட்பமான கட்டிடக்கலை வல்லமையும் கலைஞர்களின் கலை ஆர்வத்தின் பிரதிபலிப்பாகத் திகழ்கின்றன. இவ்வாறுகத்தான் காலங்காலமாக கல்லிலே கலை வண்ணம் கண்டு வழிவழி மரபை உலகறியச் செய்துள்ளனர்.

பழங்கால மரபுகளை மனதில் கொண்டு தாவண்கெரே காட்டன் மில்ஸில் புராண அழகை பிரதிபலிக்கும்படியான துணி வகைகளைத் தயாரித்தளிக்கிறோம். நுட்பமான நெசவு, கலைஞர்களின் கைவண்ணம்— எண்ணிலடங்கா துணி வகைகள், ஒவ்வொருவரும் பாராட்டும் வண்ணம்.

சிறந்த துணிமணிகளை உயர்ந்த மரபாகக் கருதுவது

## தாவண்கெரே

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்,
ஹனுமந்தப்பா கட்டிடம், சித்ரதுர்கா ரோடு,
தாவண்கெரே-577 002.

ஷோரூம்:
காவேரி பவன், பெங்களூர் 560 009.
தாஜிபன்பேட், ஹுப்ளி 580 020.
சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே 577 002.

இச்சிங்ஸ்வரா கோயில்,
இச்சிங், மயூர்பாஞ், ஒரிசா.
இ.பி. 11-12-ஆம் நூற்றாண்டு



"அன்னை பராசக்தி "அங்காள பரமேஸ்வரி தாயே துணை"

### சேலம் சித்த வைத்தியர்

# டாக்டர் S. R. சிவராஜ்

### அவர்களின் சாதனை

**சிவராஜ் சித்த வைத்தியசாலையில் தயாராகும் மருந்துகள், பிணிகளை நீக்கவும், புத்துயிரளிக்கவும் பெரிதும் உதவுகிறது**

○ குழந்தை பாக்கியம் (கெர்ப்பணுக்கள்) இல்லாதவர்கள், ○ ஆண்மை வீரியம் இல்லாமல் பலஹீனமடைந்தவர்கள், ○ வாலிபத்தை வீணாக்கி, சக்தி இழந்தவர்கள், பயமுள்ளவர்கள் ○ கல்யாணம் செய்யப் பயந்து காலம் கடத்தி வருபவர்கள், ○ அதிக உஷ்ணம் — கண் எரிச்சல் — தூக்கமின்மை — உடல் வலி, ○ நரம்புத் தளர்ச்சி — உடலுறுப்புக்கள் தளர்ச்சி — நடுக்கம், ○ மற்றும் உங்கள் ரகசிய வியாதிகளுக்கும்

நாள்பட்ட ஆஸ்துமா — இளைப்பு — இருமல் — தும்மல் — மூக்கடைப்பு — பீனிசம் — சைனஸ்பிலியா — இருதய வலி — படபடப்பு — அன்னை விலாவைத் தூக்கி தூக்கி மூச்சு வாங்குதல் — கோழை கட்டு, பனி, மோடம், மழை காலங்களில் ஏற்படும் இளைப்பு — கர் மூர்ரென்று மேல் மூச்சு போன்ற கப வியாதி பித்தத்தினாலும், வாய்வுனாலும் ஏற்படும் மலச்சிக்கல் — மலக்கட்டு, வயிற்றுவலி — குடல் புண் — பித்த மயக்கம் — தலைவலி — தலைபாரம் நாள்பட்ட ஒரு தலைவலி — கண் பார்வையில் பூச்சு பறப்பது போலிருத்தல் பசியின்மை — பொருமல் — வயிறுப்புசம் — காமாலை — சோகை — இரத்தக்குறைவு மேகத்தினாலும் — தொந்து வியாதியினாலும், விஷப்பூச்சுகள் கடியினாலும் ஏற்படும் சரும நோய்கள் — படை — கள் — ஊரல் — அரிப்பு — கருநிற, செந்நிற படைகள் — செதிள்களாக உதிரும் கிரந்தி படைகள் — வெண் மேகம், பாதவெடிப்பு — பனி வெடிப்பு முதலான நோய்கள். பெண்களுக்கு ஏற்படும் சகலவித நோய்கள். மேலே குறிப்பிட்ட வியாதியஸ்தர்கள் எமது பிரதம டாக்டரை

**◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇※ சென்னையில் கீழ்க்கண்ட இடங்களில் ※◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇**

சந்தித்து வைத்திய ஆலோசனை பெறலாம்

கீழ்க்கண்ட தங்குமிடங்களில் எமது கிளை அலுவலகத்தில் எமது மருந்துகள் கிடைக்கும்

---

கிளை வைத்தியசாலை

**சென்னை - 1**

தேதிகள் : 1, 2, 3 தேதி வரை

பிரதம வைத்தியர்

**ஹோட்டல் ரோலக்ஸ் ரூம் நெ. 5ல்**

போன் : 24236

(190 N S C போஸ் ரோடு (சௌகார் பஜார்)

(பூக்கடை — டெலிபோன் ஆபீஸ் எதிரில்)

சென்னை - 1

பார்க்கும் நேரம்: காலை 8 மணி to இரவு 8 மணி

கிளை வைத்தியசாலை

**சென்னை - 2**

தேதிகள் 4ந்தேதி முதல் 10ந்தேதி வரை

பிரதம வைத்தியர்

**ராமச்சந்திரா லாட்ஜ் ரூம் நெ. 8ல்**

போன் : 846526

7, அத்திப்பட்டன் தெரு மவுண்ட் ரோடு

P O R R & சன்ஸ் — பெட்ரோல் பங்க்

மேற்குபுரம், சென்னை - 2

காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை

---

**ஆலோசனை கட்டணம் ரூ. 10-00 ※ சிகிச்சைக் கட்டணம் தனி**

எமது கேட்லாக் வேண்டுவோர் ரூ. 1-00 ஸ்டாம்ப் அனுப்பியோ: M.O. செய்தோ பெறலாம்

**எமது உயர்ந்த — விசேஷ — ஸ்பெஷல் மருந்துகள் கிடைக்கும்**

| உயர்ந்தரக சிகிச்சை 1 மாதம் ★ | | | விசேஷ சிகிச்சை 1 மாதம் ★ | | | ஸ்பெஷல் சிகிச்சை 1 மாதம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1 நெம்பர் |
| 1500-00 | 750-00 | 500-00 | 400-00 | 300-00 | 200-00 | 175 00 | 150-00 | 115-00 |

ஹெட்டாபீசுக்கு லெட்டர் எழுதி V.P.P. மூலமும் பெறலாம். தேவையான சிகிச்சைக்கு டிராப்ட் மூலம் (பேங்க் ஆப் இந்தியா) வாங்கி அனுப்பினால் ரிஜிஸ்டர் பார்சல் மூலம் பெறலாம். டாக்டர் S. R. சிவராஜ் ஹெட்டாபீஸில் 11, 16, 17, 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள் வரை சந்திக்கலாம். மற்ற நாட்களில் வெளியூரில் இருப்பார்.

---

# H.O. சிவராஜ் சித்த வைத்தியசாலை

சென்ட்ரல் டாக்கீஸ் வடபுரமுள்ள ஏரியில் **சேலம் — 636 007**

# "என் குழந்தையின் முதலாண்டு இனிய அனுபவங்கள்"

ரூ 300/=
இரண்டாம் பரிசுக் கட்டுரை

தற்போது என் வயது இருபத்தி ஏழு. என் ஐந்தாவது வயதில் டைபாய்டு ஜுரம் வந்து எனக்குக் காது மந்தமாகிவிட்டது என்று என் பெற்றோர் மூலம் பிறகு அறிந்தேன். அப்போதிருந்தே என் பெற்றோர் பல டாக்டர்களிடம் காண்பித்து சிகிச்சை செய்ததின் மூலம் சிறிதளவாவது கேட்க முடிந்தது. பதினேழாவது வயதில் என் திருமணம் நடந்தது. திருமணத்துக்கு முன் என் கணவரோ, அவர் குடும்பத்தைச் சேர்ந்தவர்களோ என்னை எங்கே கேலி செய்யப் போகிறார்களோ, அவர்கள் ஏதாவது கேட்க, நான் ஏதாவது பதில் சொல்லிவிட்டால் எப்படி என்றெல்லாம் நினைத்து அடிக்கடி கண்ணீர் விட்டு அழுவேன். எப்படியோ திருமணமும் நடந்து முடிந்து விட்டது. புக்ககத்தில் யாரும் என் காது கேளாத் தன்மையை ஒரு பொருட்டாகவே நினைக்கவில்லை. என் கணவரோ என்னிடம் பேசும்போது பேசுவது கேட்காவிட்டால் எத்தனை முறை கேட்டாலும் சலிக்காமல் பதில் சொல்லுவார். இதை நினைத்து நான் பெருமை கொள்ளாத நாளே கிடையாது.

என் திருமணம் நடந்த மறு வருஷமே ஒரு அழகான ஆண் குழந்தைக்குத் தாயாரானேன். அவன் அழும்போது சில நேரங்களில் கேட்காதே என்று இரவில் பெரும்பாலும் தூங்காமல் குழந்தையைக் கண்காணித்த வண்ணம் விழித்திருப்பேன். படுக்கை அறையில் ஒரு அலாரம் டைம் பீஸையும், சிறிது தூரத்தில் ஒரு சிம்னி விளக்கையும் வைத்துக்கொண்டு படுப்பேன். இரண்டு மணிக்கு ஒரு தரம் குழந்தையை எடுத்து (அவன் அழாவிட்டால் கூட) வயிறு நிறைய பால் கொடுத்துவிட்டுச் சிறிது நேரம் கண் அயர்வேன். விடியும்வரை குழந்தையின் அழுகைச் சத்தமே கேட்காது. என் தாயோ 'பரவாயில்லையே குழந்தை' இப்போதே மிகவும் சமர்த்தா இருக்கிறானே என்று பாராட்டுவார்கள்.

சபியா ராஜா

என் மகனுக்கு மூன்று மாதம் வரைதான் என்னால் தாய்ப் பால் கொடுக்க முடிந்தது. பிறகு கிளாக்ஸோ பால் பவுடர் கலந்து கொடுக்க ஆரம்பித்தேன். பத்துப் பதினைந்து நாட்களுக்குப்பிறகு பாரெக்ஸ் கொடுத்தேன். என் மகன் பாரக்ஸை விரும்பிச் சாப்பிட்டான். நாளடைவில் முட்டையை வேகவைத்து பாரக்ஸ் கலந்தும் பழச் சாறு கலந்தும் கொடுக்க அவன் வாயெல்லாம் சப்புக் கொட்டிக் கொண்டு சாப்பிடுவதை நான் மிகவும் ரசிப்பேன். ஒரு நாளைக்கு இரண்டு தடவை காலை 10 மணிக்கும். மாலை 3 மணிக்கும் கொடுத்து வந்தேன். மற்ற நேரங்களில் கிளாக்ஸோ பால் கொடுத்து வந்தேன். பிறந்தபோது ஒல்லியாக இருந்த குழந்தை ஐந்தாவது ஆறாவது மாதத்தில் கை, கால், கன்னம் எல்லாம் சதை பிடித்து மிகவும் புஷ்டியாக ஆரோக்கியத்துடன் வளர ஆரம்பித்தான். மிகவும் சுறுசுறுப்பாகத் துறுதுறுவென்று எதையாவது பிடித்து இழுப்பான். அவனை அந்தத் தெருவில் அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் எல்லாம் ஆள் ஆளுக்கு எடுத்துச் சென்று விடுவார்கள்.

வேலை நேரத்தில் அவனுடைய தொந்தரவும் இருக்காது. சில நாட்கள் தொடர்ந்து இரவு நேரங்களில் அழுவான். என்ன சமாதானப்படுத்தியும் அழுவதை நிறுத்தின பாடில்லை. எங்களுக்கெல்லாம் மிகவும் கவலையாகிவிட்டது. என் தாய் குழந்தைக்குத் திருஷ்டி கழித்த பின் சிறிது நேரத்தில் குழந்தை அழுவதை நிறுத்திவிட்டுத் தூங்கினான். அதுமுதல் மாலை மணி ஆறு ஆனதும் என் தாய் அதே வேலையாக அவனுக்குத் திருஷ்டி சுற்றிப் போடுவார்கள்.

எனக்குக் காது கேளாது என்பதை அவனும் தெரிந்து வைத்திருப்பான் போலும்! அவனுக்கு எட்டாவது மாதம் நடக்கும்போது அவன் நடந்து கொண்ட விதத்தை இப்போது நினைத்தாலும் எனக்குச் சிரிப்பு வருகிறது. தினமும் இரவு படுக்கப் போகும் போது நடு இரவில் குழந்தைக்குப் பால் கலந்து கொடுப்பதற்கென்று கைக் கெட்டும் தூரத்தில் வெந்நீர் அடங்கிய பிளாஸ்க், ஸ்பூன், இரு டம்ளர்கள், கிரைப் வாட்டர், பால் புட்டி, ரப்பர், கிளாக்ஸோ டின் சர்க்கரை டின் இவ்வளவையும் வைத்திருப்



பாரக்ஸ் – கல்கி
குழந்தைப் பராமரிப்புப்
போட்டி

பேன். சில இரவுகளில் பாலுக்கு அழுது நான் எழுந்திருக்கவில்லையோ என்னவோ, எழுந்து வந்து என் கன்னத்தில் நன்கு உரைக்கும்படியே பளார் என அடிப்பான். உடனே நான் எழுந்து பார்த்தால் அவன் பால் டின்னைத் தன் கைகளால் காட்டுவான். நான் பால் கலக்கி ஆற்றிக் கொண்டிருந்தால் பால் புட்டியை எடுத்துக் கொடுப்பான். பாலை ஊற்றினால், ரப்பரைக் கொடுத்துவிட்டுப் படுத்துக் கொள்வான். பால் புட்டியைக் கொடுத்தால் குடித்துவிட்டு, மறுபடியும் சிறிதளவாவது ஊற்றிக் கொடுத்தால்தான் நிம்மதியாக உறங்குவான். தினசரி இவ்வாறே இரவில் நடக்கும்.

பகலில் வீட்டில் யாரும் இல்லாத நேரத்தில் நான் வேலையாக இருந்தால் யாராவது வந்து கதவு தட்டினால் குழந்தை என் புடவையை இழுத்துவிட்டு வாசலுக்கு நேரே போய் உட்கார்ந்து கொள்வான். அவன் குறிப்பை உணர்ந்து எழுந்து சென்று வாசலைப் பார்த்தால் யாராவது கதவைத் தட்டிக் கொண்டிருப்பார்கள்.

ஒரு நாள் மாலை 6 மணி காட்சிக்கு சினிமாப் பார்க்கப் புறப்பட்டுக் கொண்டிருக்கும்போது எனக்கு வெகு அருகில் லாரி ஒன்று வந்து கொண்டிருந்தது. நான் கவனிக்காமல் நடந்துகொண்டிருந்தேன். உடனே என் கையிலிருந்த என் மகன் அம்மா, அம்மா என்று என் கன்னத்தில் தட்டிப் பின்னால் தன் கையை நீட்டத் திரும்பிப் பார்த்த. நான் திடுக்கிட்டு உடனே விலக, அந்த லாரி என்னைக் கடந்து சென்றது. அப்போது அந்த ஒரு வயதும் முடியாத என் மகனால் நான் காப்பாற்றப்பட்டதை நினைத்தால் இப்போதும்கூட என் உடம்பு சிலிர்க்கிறது.

இப்படிப்பட்ட அருமையான அறிவு பூர்வமான ஒரு மகனைக் கொடுத்ததற்கு இன்னும் கூட ஆண்டவனுக்கு என் இதய பூர்வமான நன்றியைச் செலுத்தத் தவறுவதில்லை.

அவனுடைய ஆண்டு நிறைவின்போது நாகூர் தர்க்காவுக்குச் சென்று அவன் நீண்ட ஆயுளுடன், நல்ல ஆரோக்கியத்துடன் நல்ல வாழ்க்கை வாழப் பிரார்த்தனை செய்துவிட்டு வந்தோம்.

---

# ரசிகமணி ஓ வசியமணி!

ரசிகமணி டிகேசி நூற்றாண்டுத் திருநாளன்று (23-8-81) அன்னாரின் சமாதியில் சுந்தா பாடியது:

கோலமிகு குற்றாலக் குறவஞ்சி நூலின்
ஜாலங்கள் செய்விக்கும் சந்தங்கள் தம்மைப்
போலித்துப் பாடலிதைப் புனைந்துள்ள என்னை
மேலகரக் கவிவாணர் மன்னிப்பாராக.

குற்றால நாதருடன் மற்றொரு நாதர்
கொலுவிருந்தார் மாட்சியுடன் இத்தலத்திலே
முற்றுமாக டிகேசி தம்பர நாதர்
மூன்றெழுத்தில் டிகேசி என்ற பெருமான்.

ரசிகமணி பட்டத்தைக் கல்கி சூட்டினார்
ரசிகரிடை ரத்தினமாய் மின்னியதாலே;
ரசிகமணி என்ற பேரைத் தமிழர் ஏற்றனர்,
வசியமணி அண்ணமணி என்று போற்றினர்.



(வேறு)

கூடக் காண்பது டிகேசி வீட்டிலே
கவிஞரும் கலைஞரும் அறிஞரும் சுவைஞரும்
டி.கே.சி. வீட்டிலே டி.கே.சி. வீட்டிலே
நாடக் காண்பது நவரச நயங்கள்
நுகரக் காண்பது நெஞ்சக ஒலிகள்;
டி.கே.சி. வீட்டிலே டி.கே.சி. வீட்டிலே
ஆடக் காண்பது அழகெனும் பொன்மயில்
அதற்கிசை காண்பது ஆனந்தப் பண் குயில்
டி.கே.சி. வீட்டிலே டி.கே.சி. வீட்டிலே
ஓடக் காண்பது பைந்தமிழ் வெள்ளம்
ஒன்றிடக்காண்பது நினைப்பவர் உள்ளம்
டி.கே.சி. வீட்டிலே டி.கே.சி. வீட்டிலே

(வேறு)

ஆங்கில மோகினி மாயத்தை மாற்றிய
அண்ணலே — தனிப்
பாங்குடன் பைந்தமிழ்ப் பாசத்தை
ஊட்டிய அண்ணலே!
கம்பன் காவியத்தில் செம்மையாய்த் தோய்ந்த
எம் செம்மலே — அதைச்
செம்புனலாகப் பொழிந்து மகிழ்வித்த
செம்மலே!
நண்பர் குழாத்தினை நேசித்துப் பேணிய
நாதரே (குரு) — தமிழ்ப்
பண்பாட்டுருவமாய்ப் பாரில் உலாவிய
நாதரே!
அஞ்சலி செய்துமைப் போற்றுகிறோம் தமிழ்
ஞானியே — எங்கள்
நெஞ்ச மலர்களால் அர்ச்சனை செய்கிறோம்
ஞானியே!



# கடுகு பதில்கள்

⌘ மு. கல்யாணசுந்தரம், மேட்டுப்பாளையம்
கே. இசைக்கு மொழி அவசியமா?
ப: அவசியம் என்றுதான் நான் கருதுகிறேன். இசை என்பது சர்க்கரை மாதிரி. வெறு மனேயும் சாப்பிடலாம். ஜாங்கிரி, லட்டு போன்ற இனிப்புக்கள் மூலமும் சாப்பிட லாம். இத்தகைய இனிப்புகளாகச் சாப் பிடும்போதுதான் ருசிக்கவும் ரசிக்கவும் முடிகிறது. மொழி என்பது இசையுடன் சேரும்போது இனிப்புப் பணியாரங்களாக ஆகின்றன.

⌘ சி. சுந்தரராமன், சென்னை-17
கே. நீங்கள் எங்கு சிக்கனத்தைக் கடைப்பிடிக் கிறீர்கள்?
ப: தர்மம் செய்கிறபோது. (நான் மெஜா ரிட்டி வழியைப் பின்பற்றுகிறவன்.)

⌘ வி. கே. சுந்தர், சென்னை-15
கே. 'திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப் படு கின்றன' என்பதைப் பற்றி?
ப: அங்கு நிச்சயிக்கப்பட்டிருக்கலாம். ஆனால் அப்படி அங்கு நிச்சயிக்கப்பட்டபடி திரு மணங்கள் நடப்பதில்லையோ என்று தோன்றுகிறது. பல தம்பதிகளைப் பார்க் கும்போது!

⌘ வெ. பாலசந்திரன், குரோம்பேட்டை
கே. கடுகு பதில்கள் 1. சிறப்பு 2. அறுவை 3. அருமை 4. போரிங். டிக்குங்கள்.
ப: சிறப்பான அறுவை; அருமையான போரிங். ஆக நாலு டிக்குகள்.

⌘ நா. சங்கரன், மதுரை-1
கே. வாழ்க்கை வரலாறு நிகழ்ச்சியினை எழுத என் னென்ன தகுதிகள் வேண்டும்?




ப: பலதரப்பட்ட வித்தியாசமான அனுப வங்கள் கொண்ட வாழ்க்கையாக இருக்க வேண்டும். அதைவிட முக்கியம் அதைச் சுவையாக மற்றவர்களும் ரசிக்கும்படி எழு தும் திறமை இருக்க வேண்டும். இந்த இரண்டும் சேர்ந்து இருப்பது அபூர்வ மாக இருப்பதால் பெரும்பாலான வர லாறுகள் சுவையாக அமைவதில்லை.

⌘ வெ. பாலசந்திரன், சென்னை-44
கே. ஷேக்ஸ்பியரை நாம் தமிழில் சேகப்பிரியர் என்று கூறலாமா?
ப: கூடாது. தமிழில் வரும்போது பெயர் மாறிவிடுமா? இப்படித்தான் விழி இழந்



தோர் படிப்பதற்காக 'ப்ரெய்ல்' அச்சு முறையை பிரெய்ல் என்பவர் கண்டு பிடித்தார். இந்தக் கண்டு பிடிப்புக்காக நாம் ஜன்ம ஜன்மத்துக்கு அவரை நன்றி யுடன் நினைவுகூர வேண்டும். அப்படி இருக்க, பிரெய்ல் அச்சு முறையை 'திருதி ராஷ்டிரம்' என்று தமிழ்ப்படுத்தி விருந் தார்கள் ஒரு கட்டுரையில். இதைப் பார்த்தபோது மன வருத்தம் ஏற்பட்டது.

⌘ சி. சௌந்திரபாண்டியன், கிருஷ்ணகிரி
கே. கண் தானம், ரத்த தானம் - இரண்டில் எது அளவிடற் சிறந்தது?
ப: இரண்டும் மிகச் சிறப்பானவை என்றாலும் கண் தானத்துக்கு ஈடாக எதையும் கூற முடியாது. போஷாக்கு நிறைந்த உண வுகள் மூலமாவது ரத்த ஓட்டத்தை அதிகப்படுத்தலாம். ரத்த தானம் அடிக் கடியும் செய்யக் கூடியது. கண் தானம் வாழ்க்கையில் ஒரே ஒரு தரம்தான் செய் யக் கூடியது. இந்தியாவில் கண் தானத் துக்காகக் காத்திருப்பவர்களில் பத்து சதவீதம் பேருக்குக் கூட கண்கள் கிடைப் பதில்லை. குட்டி நாடான இலங்கை தங்கள் தேவையைப் பூர்த்தி செய்து கொள்வது மல்லாமல் நமக்கு நிறையக் கண்களைத் தருகிறது. கண் தானம் செய்வது ஒரு இயக்கமாக வளர வேண்டும்.

⌘ கே. எஸ். எஸ். மணியன், கூத்தாநல்லூர்
கே. காவிரி நீர்ப் பிரச்னை எப்போது தீரும்?
ப: காவிரியில் நீர் தீர்ந்ததும்!

பரிசு பெறுபவர்:

சி. சௌந்திரபாண்டியன்
18-பி, மோகன் ராவ் காலனி
கிருஷ்ணகிரி - 635001

# தீண்டாமையை எதிர்த்த தீரன்



மகா கவி பாரதியார் ''எம்மதமும் சம்மதம்'' என்ற வள்ளலாரின் கொள்கையை ஏற்று அதன்படி இஸ்லாமியர் தொழும் அல்லாவைப் பாடினார்; கிறித்துவர் வணங்கும் ஏசு மீதும் பாடினார். இதற்குக் காலந் தந்த தூண்டுதலும் ஒரு காரணமாக இருந்தது.

1919 முதல் 1921 வரை நாட்டில் கிலாபத் கிளர்ச்சியை நடத்திக் கொண்டிருந்தார் காந்தியடிகள், இஸ்லாமியர்களுடன் இணைந்து நின்று! அப்போது இந்து—முஸ்லிம் மக்கள் ஒன்றுபட்டு, ''வந்தேமாதரம் — அல்லா—ஹு அக்பர்'' என்னும் கூட்டுக் கோஷத்தை எழுப்பிக் கொண்டிருந்தனர்.

20–6–20ல் கடையநல்லூருக்கு அருகில் உள்ள பொட்டல் புதூர் என்னும் ஊரிலே, முஸ்லிம்கள் அடங்கிய கூட்டமொன்றிலே, ''இஸ்லாம் மார்க்கத்தின் மகிமை'' என்னும் பொருள் பற்றிப் பாரதியார் பேசினார். அந்தப் பேச்சின்போதுதான் அவர் முதன் முதலாக, 'அல்லா, அல்லா, அல்லா' என்னும் பாடலைப் பாடினார். ''நான் அல்லாவின் மீது பாடிக் கொணர்ந்திருக்கும் தமிழ்ப் பாட்டை இங்கு வாசித்துக் காட்ட அனுமதி தரும்படி வேண்டுகிறேன்'' என்று சொல்லி இஸ்லாமியர் நிறைந்த அந்த அவையின் அனுமதியைப் பெற்றுப் பாடியிருக்கிறார்.

ஏசுவைப் பற்றிய பாட்டை எப்போது, எந்தச் சூழ்நிலையில் பாடினார் என்பது தெரியவில்லை. என்றாலும் 1917க்குப் பின்தான் அதைப் பாடியிருக்க வேண்டும்.

பாரதியார் பாடல்களைக் கொண்டு வெளியான முதல் நூலிலே — முதல் பாடலிலே,

''முப்பது கோடியும்
வாழ்வோம்! — வீழில்
முப்பது கோடி
முழுமையும் வீழ்வோம்''

என்கிறார் பாரதி. வாழ்வானாலும் தாழ்வானாலும் மக்களிலே ஒவ்வொருவருக்கும் அவற்றிலே சமபங்கு இருக்க வேண்டும். இது பாரதி வலியுறுத்திய சமத்துவம் — சமதருமம்.

இன்று பலபேர் நினைக்கிறார்கள், ''தேச விடுதலைக்குப் பாடுபட்டவர்கள் சமுதாய விடுதலைக்காகப் பாடுபடவில்லை என்று. அறியாமை! தேச விடுதலைக்காகப் போராடிய போதே, சாதிக் கொடுமையை — சமயப் பொய்மையை — பெண்ணினத்தை அடிமைப் படுத்திய பேதைமையை எதிர்த்துப் பிரசாரம் செய்தனர் தேசியவாதிகள். பால்ய விவாகத்தை எதிர்த்தனர். சாதி சமய வழிப்பட்ட கலப்பு மணத்தை, விதவா விவாகத்தை விடுதலை வீரர்கள் ஆதரித்துப் பிரசாரம் செய்தனர். ஆனால் விடுதலைப் போரைக் கைவிட்டு, அவர்கள் சமூக சீர்திருத்தத்துக்காகப் பாடுபடவில்லை. காரணம், தேச விடுதலையின்றிச் சமூக விடுதலை கிடைக்காதென்று அவர்கள் நம்பியதுதான். அதனால்தான், சமூக விடுதலைக்கான முயற்சியைப் பிரசார அளவில் நிறுத்திக் கொண்டு, தேச விடுதலைக்காகப் போராடினேம்.

சமதரும சமுதாயத்திலே மனிதனை மனிதன் தீண்ட மறுப்பது அனுமதிக்க முடியாத கொடுமையாகும். இந்தக் கொடுமை இந்தியாவிலேதான் இருந்து வருகிறது. சமதர்ம சமுதாயம் காண விரும்பிய பாரதியார் இந்தக் கொடுமையை வெறுத்தார், எதிர்த்தார். தாழ்த்தப்பட்டோர் எனப்படும் மக்களிடை கூட விழிப்புத் தோன்றியிருப்பதை உயர் சாதி மனம் படைத்த இந்து சமுதாயத்துக்கு நினைவூட்டினார்.

''நமது தமிழ் நாட்டுப் பறையர் கூடக் கண் விழித்துத் தாங்கள் மனிதர் என்பதைத் தெரிந்து கொண்டு மற்ற சாதியாருக்குத் தாங்கள் சமம் என்று தீர்மானம் செய்கிறார்கள்.'' என்கிறார் பாரதியார். அவர் காலத்திலே, தமிழ் நாட்டுத் தாழ்த்தப்பட்ட மக்கள் ''பறையர் மகாஜன சங்கம்'' என்னும் பெயரில் ஒரு அமைப்பினை நடத்தி வந்தனர். அதனால்தான் அவர்களாலேயே அங்கீகரிக்கப் பட்டிருந்த ''பறையர்'' என்னும் சொல்லைத் தமது கவிதைகளிலும் கட்டுரைகளிலும் பாரதியார் பயன்படுத்தி யிருக்கிறார்.

பாரதியார், அந்தணர் — அரசர் — வணிகர் —வேளாளர் என்னும் நால் வருணப் பாகுபாடு தொழிலுக்கென்றே தோன்றியவை என்று கருதினார். ஆனால் அந்த வகையில் நால் வருணப் பாகுபாடு அழிந்து போய் விட்டதென்றும் அவர் நம்பினார். பிறப்பு காரணமாக நிலவி வரும் வருணாசிரமத்தை எட்டயபுரம் கவிஞர் எதிர்த்துப் போராடினார்.

ம.பொ.சி.

(மயிலை இலக்கிய வட்டம் - பாரதிய வித்யாபவனச் சொற்பொழிவிலிருந்து)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone : 431643) Editor : K. Rajendran

நீங்களே கணக்கிட்டு பாருங்கள்!

300 கிராம்
ரூ. 3·20

# ஒரு சாதாரண டிட்டர்ஜண்ட் சலவை கட்டியை விட எடையோ இரண்டு மடங்கு விலையோ சிலகாசுகள்தான் அதிகம்

# டோட்டல்

## நீல டிட்டர்ஜண்ட் சலவை பார்







சுலபமான சலவைக்கு 5 சிறிய பகுதிகள்

உண்மையான முதல் டிட்டர்ஜண்ட் பார்!

டோட்டல், நீல டிட்டர்ஜண்ட் சலவைக் கட்டியின் அதிக வெண்மையையும், சலவை பார் சோப்பின் சௌகரியத்தையும் கொடுக்கிறது.

சிக்கனமாக சலவை செய்ய இதை 5 சிறிய பகுதிகளாக்கி உபயோகிக்கலாம்.

எடையோ இரண்டு மடங்கு விலையோ சில காசுகள்தான் அதிகம்!

நீங்கள் 125 கிராம் எடையுள்ள சாதாரண டிட்டர்ஜண்ட கட்டியை என்ன விலைக்கு வாங்குகிறீர்கள்?

300 கிராமின் விலை ரூ. 3.20 என்றால் 250 கிராம் டோட்டலின் விலை ரூ. 2.67 தான். அதாவது ஒரு சாதாரண சலவைக் கட்டியைவிட எடையோ இரண்டு மடங்கு, விலையோ சில காசுகள் தான் அதிகம்.

தமிழ் நாடு, பீஹார் மற்றும் ஆந்திர பிரதேஷ் மாநிலங்களில் மட்டும் கிடைக்கும்.

MCA-TOB-51-Tam

---

கர்நாடக சோப்ஸ் அண்ட் டிட்டர்ஜெண்ட் லிமிடெட் அளிக்கும் தரமான தயாரிப்பு
விற்பனை செய்பவர்கள்: மைசூர் சேலஸ் இண்டர்நேஷனல் லிட்., பெங்களூர்.

# காந்தமென அலங்காரம் கவர்ந்திழுக்க

REGISTERED No. M 4367
Registered as a Newspaper in Sri Lanka

கவிபாடுதே உங்கள்
கண்கள்... கவர்ச்சி காட்டுதே
ரோஜா இதழ்கள். கட்டழகு
மலருதே. நெற்றி கொண்ட
சிங்கார் குங்குமத்தால்.

சிங்கார்... உன்னத
பொருட்களால் உருவானது.
உங்கள் உள்ள நிலைக்கும்
உடை அழகுக்கும் ஏற்ற
வண்ணங்களிலே.




**சிங்கார்**

குங்குமப் பொட்டு
இந்தியாவின்
ஒப்பற்ற
அழகுதிலகம்.